அதிர்ஷ்ட ரஹஸ்ய மென்னும்

# ஸ்ரீ கணேச ஆரூட தீபிகை

இஃது

வே. கன்னைய நாயுடு

அவர்களால் இயற்றியது.



B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள் விலாச அச்சு நிலையம்,

சென்னை.

 1951. [விலை ரூபா 1.

ஓம்

சற்குருவே நம:

அதிர்ஷ்டரஹஸ்யமேன்னும்

# ஸ்ரீ கணேச ஆரூட தீபிகை

மூலமும் - உரையும்

இஃது

வே. கன்னைய நாயுடு அவர்களால்

இயற்றியது.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள் விலாச அச்சு நிலையம்,

சென்னை.

1951.

இதன் விலை] காபிரைபிட். [ரூ 1-0-0.

# நூன்முகம்

துவாபரயுகத்தில் அநேக கோடி மஹரிஷியர்கள் கோடானு கோடி கஷ்டங்கள் தொடர்ந்து அவரவருடைய ரதகஜ துரகபதாதிகளெல்லாம் தோற்று காஷாயரூடாய் துன்பப்பட்டுக் கொண்டிருக்கையில் அச்சமயம் லோகரக்ஷகனாகிய பகவானை தியானித்தார்கள். அச்சமயத்தில் இவர்கள் யெண்ணத்தை தெரிந்து பகவான் ரிஷபவாகனாரூடாய் பிரத்யக்ஷமடைந்து அன்னவருக்கு அபயஸ்தம் தந்து பின் வருமாறு சொல்லத்தொடங்கினார்.

அஃதெப்படியெனில், முற்காலத்தில் இராஜ்யபரிபாலனஞ்செய்துக்கொண்டிருந்த வேந்தர்களெல்லாம் படாத கஷ்டத்திற்கெல்லாம் உட்பட்டு சுகத்தை யடைந்ததைப்போல் நீங்களும் சுகா சுகத்தை அடைவீர்களென்று மனப்பூர்த்தியாய் ஸ்ரீ கணேசமூர்த்தி ஔவைக்கு அருளிச்செய்த அதிர்ஷ்ட ரஹஸ்யமென்னும் ஸ்ரீ கணேச ஆரூடத் தீபிகைதனை வெளிக்காட்டியதில் சக்ராத்தை ஒன்று ஸ்தாபிதம் செய்து அதில் அடங்கிய அக்ஷரங்களை அக்கணேசனை தியானித்து ஒரு பாலகனை ஓரெழுத்தைத் தீண்டசெய்து அவ்வெழுத்தின் தலையிலிருக்கும் இலக்கம்போல் பாட்டதனை பார்த்தால் நமக்கு நேரிடும் இடுக்கண்கள் யாவும் தீர்ந்து சுகமடைவீரென்று பரமசிவன் வாக்களித்துவிட்டு கைலயங்கிரி சேர்ந்தார்.

இக்கிரந்தத்தை மேற்சொல்லியதுபோல் கையாண்டுவந்தால் நமக்குரிய பலாபலன்களை தெரிந்துக்கொள்வதுடன் நாம் நினைக்கும் யெவ்வித கேள்விகளுக்கு விடையும் நன்மைதீமை தெரிந்துக்கொள்ளும்படியானதால் கற்றவரும் மற்றவரும் இந்நூலை அவசியம் கைவசமாய் வைத்திருக்கவேண்டியது.

## இந்த சக்கிரத்தை பார்க்கும் விபரம்

ஓர் பாலகனை ஸ்நானம் செய்யச்சொல்லி கற்பூர ஆராதனை செய்து அப்பாலகனிடம் ஓர் புஸ்பம் தந்து இந்த சக்கிரத்தில் ஓரெழுத்தை தீண்டச்செய்து அதின் தலையில் போட்டிருக்கும் இலக்கத்தைப்பார்த்து அந்த இலக்கமுள்ள பாட்டதனைப் படித்தால பலாபலன்களை தெரிந்துக் கொள்ளலாம். சுபம். சுபம். சுபம்.

ஓம்

தத்ஸத்

அதிர்ஷ்ட ரஹஸ்ய மென்னும்

# ஸ்ரீ கணேச ஆரூட தீபிகை.

---

## காப்பு - வெண்பா

சீர்பெருகும் கணேசர் சொல்லிய ஆரூடம்தன்னை
பேர்பெருக உலகமதில் பேசிவிட்டேன்—தார்குழலே
வேலனுக்கு முன்பிறந்த வேழமுகத்தோன் பாதம்
சீலமுடன் நீர் கோரு சீர்.

## பரமன் துதி

சங்கரனே உன்பாதம் சிந்தை தனில் யான்நினைத்து
பொங்கமாய் கணேசாரூடம் புவிதனில்வெளியிட்டேன்
மங்களமா யிதைப்பார்க்கும் மானிடர்கள் குறைதீர்த்து
இங்ஙனமே நீகார்ப்பாய்ஈசனே போற்றி போற்றி.

## உமையவள் துதி - விருத்தம்

சத்திசாமுண்டி சங்கரி கௌமாரி சடாக்ஷரி
நத்திவுன்பாதம் நிதம்துதித்தேன் நாரணி கல்யாணியே
முத்தியளித்திடும் முக்கண்ணிசூலி மகா வொளியே
யெத்திசையு முனக்கிடில்லை யென்னுள்ளத்திலாடும் சுந்தரியே.

## சுப்பிரமணியர் துதி - வெண்பா

வேலவனே உன்பதத்தை உருதியாக நான்துதித்து
நீலமதில் ஆரூடம் யெழுதிவிட்டேன்—சீலமுடன்
மயிலேரி யென்னுவில் மாசிலாமணி சுடரே
தயவுட நின்றுடும் சாமி.

## மாயவன் துதி - விருத்தம்

ஆதிமூலமெய்ச்சுடரே ஆலிலைமேல் பள்ளிகொண்ட அச்சுதனே
சோதியாக கணேசர்சொன்ன சுருதி ஆரூடம்தன்னையான்
நீதியுடன் உலகமதில் நின்றுயானும் பாடிநின்றேன்
சோதியாக யென்னுவில்நின்று ஸ்ரீராமச்சந்திரனே காரும்.

## குருவணக்கம்

அகமதனில் கொண்டிட்ட ஆங்கார பாம்பதனை
அடக்கிடவும் வழிகாட்டி ஆண்டீ ரென்னை
தகமையுடன் சுடர்வொளிதான் நிலைக்கும் வீட்டை
சுந்திரனே சூக்ஷமமாக காட்டி தந்தீர்
நிகமயுடன் உனக்கிடு பெவர்தா னுண்டு
இவ்வுலகில் தேடினும் கிட்டா ரய்யா
சுகமுடனே உன்பாதம் பிரணவ மாக்கி
சூக்ஷமமதில் நிலைநிறுத்தி துதித்து நின்றேன்.

---

# சக்கிரத்தினுள்ளடங்கிய பாட்டுகள்

## முதல் வீட்டின் பலன்

### 1-வது பாட்டு

அப்பனே முதல்வீட்டின் பலனைச்சொல்வேன்
அன்புடனே நீகேளும் புவியின்மீது
இப்பவே தொலைதூரம் சென்ற மனிதர்
இன்பமாய் வீடுவந்து சேர்வாரப்பா
செப்பவே நீகோரிநின்ற காரியம்
சுருக்குடனே சென்றபொருள் வந்தேசேரும்
ஒப்பவே கணேசர்பாதம் போற்றி செய்து
உலகமதில் பலாபலத்தை உரைத்திட்டேனே.

வசனம்:—ஸ்ரீ கணேசர் கடாக்ஷத்தினால் நீ கோரிய காரியமும் கைச்சோர்ந்த பொருளும் தொலைதேசம் சென்ற மனிதரும் சேருவார் இது உண்மை யென்று யறிந்திடுவீர்.

## இரண்டாவது வீட்டின் பலன்

### 2-வது பாட்டு

திரமுடனே இரண்டாவது வீட்டின் பலனை
தேடியே சொல்குவேன் நீதான்கேளு
பரப்பரப்பாய் நினைத்தகாரியம் பலியாதப்பா
பண்புடனே கைப்பொருளும் நஷ்டமாகும்
நிலைமையுடன் புவிதனிலே பகையுண்டாகும்
நீணிலத்தில் தெய்வப்பலன் உனக்கேயில்லை

மரப்பொன்று மில்லையடா சொல்லிவிட்டேன்
மைந்தனே இந்த காரியம் நினைக்காதப்பா.

வசனம்:—இந்த காரியம் தெய்வகடாக்ஷ மில்லாதபடியால் கைப்பொருள் நஷ்டமாகும் உலகத்தோருக்கு பகையாகும் இதை நினைக்கவேண்டாம்.

## மூன்ருவது வீட்டின் பலன்

### 3-வது பாட்டு

ஆனதொரு மூன்ருவது வீட்டின் பலனை
அய்யனே நான்சொல்வேன் நீதான்கேளாய்
கானகமே சென்றிட்ட மனிதரெல்லாம்
கைப்பொருளும் நினைத்தகாரியம் கைக்கூடுமே
தானமுடன் தெய்வபலனும் உனக்கே உண்டு
கருணையுடன் குருபலன் உனக்கேயுண்டு
பானமுடன் கணபதியை பூசைசெய்தால்
பலிக்குமடா நினைத்ததெல்லாம் உண்மையப்பா.

வசனம்:—உனக்கு தெய்வபலன் இருப்பதால் குருபார்வை யுண்டு. ஆகையால், கைசோர்ந்த பொருளும் காணுமனிதரும் வருவார். நினைத்த காரியம் கைக்கூடும். ஆனல் ஸ்ரீ கணேசனை பூசைசெய்துக் கொண்டு வருவாய்.

## நான்காவது வீட்டின் பலன்

### 4-வது பாட்டு

நலமுடனே நான்காவது வீட்டின் பலனை
நான் யெடுத்துச் சொல்லுகிறேன் நீதான்கேளு
கலகமது வொன்றுமில்லை நினைத்தகாரியம்
கைக்கூடி சுகமடைவாய் இன்னும்கேளு
தலமதனில் உனைக்கெடுத்த பகையோரெல்லாம்
தன்மையுடன் வணங்கிநிற்பார் உண்மைதானே
பலமதிகள் நினைந்திடாதே இதுதான் உண்மை
பாலகனே கணேசருட கிருபைதானுண்டு.

வசனம்:—ஸ்ரீ கணேசருடைய கடாக்ஷத்தினுல் நினைத்த காரியம் கைகூடி பகைவரை ஜெயித்து சுகமடைவீர் இது வுண்மை.

## ஐந்தாவது வீட்டின் பலன்

### 5-வது பாட்டு

இந்தகாரியம் பலிக்காதப்பா உண்மைதானே
இன்பமுடன் சொல்லுகிறேன் நீதான்கேளும்
சொந்தமுள்ளப் பொருளும்போகும் ஜெகமதன்னில்
சேர்ந்தவர்க்கு பகையுண்டு இன்னும்கேளும்
மந்தமதி கொல்லாதப்பா உனக்கேயின்று
மானிலத்தில் தெய்வபகை யதிகமுண்டு
அந்தமாகச் சொன்னேனாலும் உனக்கே யின்று
இன்பமுடன் இந்த காரியம் கூடாதப்பா.

வசனம்:—உனக்கு தெய்வத்தால் பகையுண்டு கைப்பொருள் நஷ்டமாகும் சொந்தமனிதரெல்லாம் விரோதமாவார் பகை மெத்தவுண்டு யெந்த காரியத்திலும் மனம் நிறுத்தவேண்டாம்.

## ஆருவது வீட்டின் பலன்

### 6-வது பாட்டு

பாரடா ஆருவது வீட்டின்பலனே
பண்புடனே சொல்லுகிறேன் உண்மைகேளீர்
கூரடா சநியனுட பகைதான்மெத்த
குணமுடனே குருசெவ்வாய் பகைதானுண்டு
தாரடா வையகத்தில் பொருளும் நஷ்டம்
தன்மையுடன் போலீசில் நிற்கவேணும்
மாரடா இந்தவீட்டின் பலன்தான் வேண்டாம்
மைந்தனே யெந்தகாரியமும் பலிக்காதப்பா.

வசனம்:—உனக்கு சனி குரு செவ்வாய் பகையாக யிருப்பதால் நினைத்தகாரியம் பலிக்காது ஆனல் கைப்பொருளும் சோர்ந்துபோகும் கச்சேரி மூலமாய் கெடுதி சம்பவிக்கும் யெந்தகாரியமும் பலிக்காது.

## ஏழாவது வீட்டின் பலன்

### 7-வது பாட்டு

இப்பவே ஏழாவது வீட்டின்பலனே
இன்பமா நீகேளாய் இப்போதப்பா
தப்பாமல் யெண்ணிவந்த காரியமப்பா
தனிமையுடன் யெதிரிக்கு ஜயமுண்டாகும்

செப்பரிய பயன் தான் மெத்தஉனக்கேவுண்டு
ஜெகமதிலே அனைவரும் விரோதமாவார்
ஒப்பரிய இன்னாலேதான் நம்புநம்பு
உத்தமனே உன்காரியம் பலியாதப்பா.

வசனம்:—நீர் யெண்ணிவந்த காரியம் யெதிரிக்கு பலிதமாகுமே தவிர உனக்கு பலிதமாகாது மனதிற்கு பயமுண்டாகும் உலகத்திற் விரோத மதிகரிக்கும், இந்தக்காரியம் பலியாது.

## எட்டாவது வீட்டின் பலன்

### 8-வது பாட்டு

எட்டாவது வீட்டின்பலனை இன்றுநானும்
யெடுத்துநான் சொல்குவேன் கேளாயப்பா
பட்டமுடன் குருகடாக்ஷம் உனக்கேவுண்டு
பண்புடனே நினைத்ததெல்லாம் பலிக்குமப்பா
திட்டமாய் யெதிராளி பயமாய் நிற்பார்
தேடரிய ஜெயபேரி நீதான் அடிப்பாய்
சட்டமாய் உன்மனதில் கலக்கம் வேண்டாம்
ஜெயமடைவாய் இப்பலன் தான் உனக்கேகிட்டும்.

வசனம்:—குருகடாக்ஷமிருப்பதால் நீ யெந்தகாரியம் நினைத்தப்போதிலும் ஜெயமாகும் யெதிராளி சமாதானமடைவார் இது நிக்ஷயமென்று யெண்ணுவீர்.

## ஒன்பதாவது வீட்டின் பலன்

### 9-வது பாட்டு

நீநினைத்த வொன்பதாம் வீட்டின்பலனை
நிக்ஷயமாய் சொல்குமேன் நீதான்கேளும்
காணியுடன் பூமிவரும் பகைதான் நீங்கும்
கைப்பொருளும் வந்துசேரும் கலகமில்லை
மானிலத்தில் உனைக்கண்டால் விரோதமில்லை
மஹாரியர் அனுகூல முனக்கே வுண்டு
தானமது மெத்தவுண்டு தரணிதன்னில்
தானினைந்த காரியமெல்லாம் கூடிநிற்கும்.

வசனம்:—கைச்சோர்ந்துவிட்ட பூமியும் பொருளும் வந்துசேரும் பகைவர் உன்னைக்கண்டால் பயமடைவார் உன்னால் அனேகதானதர்மம் உண்டாகும் இது நிச்சயமென்று நம்புவீர்.

## பத்தாவது வீட்டின் பலன்

### 10-வது பாட்டு

பத்தாவது வீட்டின்பலன் சொல்வேனப்பா
பண்புடனே கன்னியொன்றை நினைத்து தொட்டீர்
சுத்தமுடன் அம்மாது பொரைக்குள்ளே தான்
சுந்தரனே வந்திருப்பாள் உந்தன்வீட்டில்
நித்தமும்நீ சிவபூஜை மறக்காதப்பா
நிகமையுடன் கைப்பொருளும் கைக்கூடுமே
முத்தமுடன் கணேசருட கடாக்ஷத்தாலே
முகந்து நீ நினைத்தகாரியம் கைகூடுமே.

வசனம்:—நீ ஓர் பெண்ணைப்பற்றி மனமிட்டு இந்த பத்தாவது வீட்டை தொட்டீர். ஆனல் கணேசருடைய கடாக்ஷத்தினுல் உனக்கு கைகூடி சுகமடைவீர் இது உண்மையென்று அறிவீர்

## பதினோராவது வீட்டின் பலன்

### 11-வது பாட்டு

அப்பனே நீதொட்ட வீட்டின் பலனை
அன்புடனே சொல்லுகிறேன் நீதான்கேளு
ஒப்பவே தெய்வபலன் உனக்கேயில்லை
உலகமதில் பகைதானு மெத்த உண்டு
செப்பவே நீகச்சேரிக்கு போகவேணும்
ஜெயமில்லை உந்தனக்கு யெந்தகாரியம்
இப்பவே நீனினைத்த காரியமெல்லாம்
உத்தமனே பலிக்காதப்பா உண்மைதானே.

வசனம்:—நீ யெந்த காரியம்பற்றி இந்த வீட்டை தொட்டீர்: ஆனல் உனக்கு யெந்த காரியமும் கைகூடாது. ஆனதால் இந்த எண்ணத்தை விட்டுவிடும்.

## பனிரெண்டாவது வீட்டின் பலன்

### 12-வது பாட்டு

இந்த நல்ல வீட்டின் பலன் சொல்வேனப்பா
இன்பமுடன் நீகேளு உண்மைதன்னை
பந்தமது மொன்றுமில்லை நினைத்ததெல்லாம்
பலிக்குமடா யெந்தகாரியம் உந்தனக்கு

அந்தமாக விரோதமது வொன்றுமில்லை
ஆண்டவன் அருளுனக்கு மெத்தவுண்டு
சந்தத மதிகரிக்கும் சுகமடைவாய்
சாலோகபதவி யுனக்கு கிட்டும் கிட்டும்.

வசனம்:—நீ நினைத்த காரியம் ஆண்டவன் கிருபையால் யெல்லாச் சங்கடம் தீர்ந்து மக்களைபெற்று சந்தஷ்டியடைவீர். இந்த காரியம் ஜெயமாகும்.

## பதின்மூன்றுவது வீட்டின் பலன்

### 13-வது பாட்டு

இன்னமொன்று சொல்லுகிறேன் நீதான்கேளு
இயல்பான பலனைதான் இப்போசொல்லுவேன்
பன்னமர உனைபகைத்த பகையோர்கண்டால்
பணிந்துமே சமாதானம் செய்துக்கொள்வார்
மன்னவரும் உலகமதில் உன்னைக்கண்டால்
மஹானுபாவர் இவரென்று மதித்துக்கொள்வார்
வின்னமர நீநினைந்த இந்தக்காரியம்
வேகமுடன் கைகூடி சுகமடைவீர்.

வசனம்:—உன்னை எதிர்த்த பகைவர் கெட்டுப்போகுவர். நீ உலகத்தோருக்கு நல்லவனென்று பெயரெடுப்பாய். இந்த காரியம் தெய்வ கடாக்ஷத்தினுல் கைகூடி சுகமடைவீர்.

## பதினுன்காவது வீட்டின் பலன்

### 14-வது பாட்டு

தொட்டதொரு வீட்டின்பலன் சொல்வேனப்பா
சுந்தரனே நீகேளாய் எந்தன்வார்த்தை
திட்டமுடன் செய்திடும் தொழில்கள் தன்னில்
திவ்யமாய் பகையுண்டு உந்தனுக்கு
பட்டபகல் போலாக புவியின்மீது
பகையுண்டு அனந்தகோடி மனிதருக்கு
சட்டமுடன் இந்தக்காரியம் நினைக்காதப்பா
சாமியுட அனுக்கிரஹம் உனக்கேயில்லை.

வசனம்:—நீ தொட்ட வீட்டின்பலன் அப்ரயோஜனமானது. நீ யெந்தக் காரியம் செய்தப்போதிலும் உனக்கு விரோதமுண்டு. நினைத்தகாரியம் பலிக்காதப்பா.

## பதினைந்தாவது வீட்டின் பலன்

### 15-வது பாட்டு

பதினைந்தாம் வீட்டின்பலன் சொல்வேனப்பா
பண்புடனே யேழுதனில் சனியனுரும்
நிதியுடனே ரவியும்கேது பகைதானுண்டு
நீணிலத்தில் குருவின்பலன் வொன்றுமில்லை
கதியுடனே மக்கள்தனை விட்டுநீயும்
தனிபொருளும் கைசோர்ந்து நிர்ப்பாயப்பா
மதியுடனே யெந்தக்காரியம் பலியாதப்பா
மைந்தனே வுந்தனுக்கு அபகீர்த்தியுண்டு

வசனம்:—நீ இந்த வீட்டைத் தொட்டபடியால் சனியன் எழிலும்சூரியன் குரு பகையுண்டு. இதல்லாமல் மக்கள் மனைவிகளை விட்டு பரதேசியாகுவாய். ஆகையால் நீ இந்த காரியம் நினைக்கவேண்டாம் பலியாது.

## பதினாருவது வீட்டின் பலன்

### 16-வது பாட்டு

ஆகாது வுந்தனுக்கு இந்தவீடு
அன்புடனே தொட்டதாலே சொல்வேன் கேளு
யோகமாய் கணேசருட அருளுமில்லை
புவிதனிலே நீநினைத்த காரியமெல்லாம்
காகம்போல் பாந்திடுவாய் எதிரிமுன்னில்
கலகமது மெத்தவுண்டு உந்தனுக்கு
போகமா யிதை நினைக்க வேண்டாமப்பா
யெள்ளளவும் பலியாது வுந்தனுக்கு

வசனம்:—இந்தக் காரியம் யெதிரிக்கு அனுகூலமே தவிர உனக்கு கொஞ்சமாகிலும் அனுகூலமாகாது. ஆகையால் இதை விட்டுவிட்டு மருவேலைப் பார்க்கவும்.

## பதினேழாவது வீட்டின் பலன்

### 17-வது பாட்டு

போனதொரு மனிதர்தான் வருவாரின்று
புவிதனிலே சென்றபொருள் கைக்கூடுமின்று
தீனமா நீநினைத்து தொட்டாயப்பா
திவ்யமாக சொல்லுகுரேன் நீதான் கேளும்

தானம்போல் குருகடாக்ஷ முனக்கேவுண்டு
தாரணியில் யெந்தகாரியம் பலிக்குமப்பா
மோனமாநீ மனது கலங்கவேண்டாம்
மூத்தோர்கள் கருணையது உனக்கேவுண்டு.

வசனம்:—உனக்கு பெரியோர்கள் அனுக்கிரஹமும் குருகடாக்ஷ மிருப்பதால் தொலைதூரம் சென்றமனிதரும் கைச்சோர்ந்துவிட்ட பொருளும் அதி சீக்கிரத்தில் காணலாம். இது வுண்மையென்று தெரிந்திடுவாய்.

## பதினெட்டாவது வீட்டின் பலன்

### 18-வது பாட்டு

ஏனப்பா வுந்தனுக்கு மாதால் துன்பம்
யெதிரிட்டபோராக வந்தே நிற்கும்
ஆனதொரு பொல்லாங்கு யடைந்துநீயும்
அரசருட கைவசமே ஆவாய்நீதான்
தானப்பா கைப்பொருளும் சேதமாகும்
தரணிதனில் யபகீர்த்தி யதிகமாகும்
நானப்பா இந்தக்காரியம் பலியாதப்பா
நன்மையது வொருக்காலும் வராதென்று.

வசனம்:—நீ தொட்ட வீட்டின்பலன் யேதென்றால் மாதால் மனக்ரோதம் நேரிடும். போலீசார்வசம் மனக்கவலை யடைகுவாய். ஆகையால் உனக்கு இந்தக்காரியம் பலியாது.

## பத்தொன்பதாவது வீட்டின் பலன்

### 19-வது பாட்டு

கலியாண மென்றுச்சொல்லி இந்தவீட்டை
கடுகவே தொட்டதால் பலனைச்சொல்வேன்
பலிதமது ஆகுமடா யெண்ணமிட்ட
பன்மையுள்ள மாதுமே கைக்கூடிநிற்கும்
அலியொன்று மில்லையடா வுந்தனுக்கு
அப்பனே கலியாணம் கூடும்போடா
மலியாமல் கணேசனுட கடாக்ஷமுண்டு
மைந்தனே கவலையது படவும் வேண்டாம்.

வசனம்:—நீ நினைத்த கலியாணம் கைக்கூடி கணேசனுடைய கருணை யதிகரித்து சந்தோஷமடைகுவாய்.

## இருபதாவது வீட்டின் பலன்

### 20-வது பாட்டு

கச்சேரிபோக மனமிட்டு நீதான்
கடுகவே இந்த வீட்டை தொட்டாயப்பா
நிச்சயமாய் சொல்வேன்கேள் உனக்கேயிப்போ
நிமையில்லா தெய்வகுற்றம் உனக்கேயுண்டு
மச்சமற்றி நீயேசென்றால் பலியாதப்பா
மைந்தனே பழியுமக்கு வந்தே சேரும்
அச்சமது பட்டுநீயும் நிற்பாயப்பா
அவனியிலே யிந்தகாரியம் பலியாதப்பா.

வசனம்:—நீ கச்சேரிக்கு போக மனமிட்டு இந்த வீட்டைத் தொட்டீர் ஆகையால் உனக்கு தெய்வசகாயமில்லை நீ நினைத்தகாரியம் பலியாது.

## இருபத்தி ஒராவது வீட்டின் பலன்

### 21-வது பாட்டு

அப்பனே உன்மனதில் கவலைவேண்டாம்
ஆண்டவனுடைய அருளுனக்கு மெத்தவுண்டு
இப்பவே கணேசருடைய கிருபையால் மைந்தா
இச்சித்த காரியமெல்லாம் கைக்கூடிநிற்கும்
ஒப்பரிய கைப்பொருளும் வந்தே சேரும்
உலகமதில் கியாதியது மெத்தவுண்டு
செப்பரிய போகும் காரியம் பலிதமாகும்
ஜெயபேரியடித்துமே சுகமடைவாய்.

வசனம்:—நீ யேதுக்கும் கவலைப்படவேண்டாம் கணேசர் கருணை யதிகமாகில் நீ இச்சித்த காரியம் கைக்கூடும் சென்றுவிட்ட பொருளும் கைக்கூடும் உலகத்தில் கியாதி யதிகரிக்கும்யெந்தகாரியமும் ஜெயமுண்டாகும்.

## இருபத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 22-வது பாட்டு

அந்தமா வுந்தன்மீது விரோதம்செய்த
அப்பனே பகையாளி கெட்டுப்போவான்
சொந்தமா யெடுத்தக் காரியம் பலிக்குமப்பா
சுந்திரனே உன்பொருளும் வந்தே சேரும்

பந்தமது செய்தவர்கள் வோடிப்போவார்
பகையொன்று முமக்கில்லை புவியின்மீது
யெந்தக் காரியம் செய்தபோதில் பலிக்குமப்பா
ஈசனுட அருளுனக்கு மெத்தவுண்டு.

வசனம்:—உன்மீது பகைவைத்த பகைவரும் கெட்டுப்போவார் பொருளும் லாபமடையும் யெடுத்தக்காரியம் சிறவேரும் இது நிச்சயமென்று நம்புவீர்.

## இருபத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 23-வது பாட்டு

அப்பனே நினைத்தகாரியம் கெட்டேபோகும்
அன்புடனே இதைநீயே நினைக்கவேண்டாம்
ஒப்பவே கைப்பொருளும் நஷ்டமாகும்
உலகத்தில் விரோதமாகி நிற்பாயப்பா
செப்பவே உந்தனுக்கு கேது ராகு
சேரவே விரோதமப்பா சொன்னேன் சொன்னேன்
இப்பவே யெடுத்தகாரியம் நிருத்துமப்பா
இதினாலே நஷ்டம் வரும் இப்போதானே.

வசனம்:—நீ நினைத்த காரியம் கெட்டுப்போகும். பொருளும் நஷ்டமாகும். உலகில் விரோதியாகுவீர். உனக்கு ராகு கேது பகையாகும். இந்தக் காரியத்தைப்பற்றி பிரயோஜனமில்லை. இதை செய்தால் பிரயோஜனமில்லை. விட்டுவிடு.

## இருபத்தி நான்காவது வீட்டின் பலன்

### 24-வது பாட்டு

சனியனும் செவ்வாய் தோஷம் சார்ந்து நிற்கும்
சிறப்புடனே ராகு கேது பகைதானுண்டு
தனிமையுடன் பகையாளி அதிகமாகும்
தரணிதனில் கெட்டபே ரெடுக்கவேண்டாம்
இனிமையுடன் யெந்தகாரியம் செய்தபோதில்
எதிராளி மெத்தவுண்டு வுந்தனுக்கு
பனிபோல சூழுமடா பழிகள் உன்னை
பார்ப்பதினால் பலிதமில்லை பலியாதப்பா.

வசனம்:—இந்த வீட்டைத் தொட்டப்படியாலே சனியன் செவ்வாய் நீசத்வமடைந்தார். ராகு கேது விரோதியாகும் சத்துருக்கள் அதிகமுண்டு. யெந்தக்காரியமும் பலியாது மத்திபம்.

## இருபத்தஞ்சாவது வீட்டின் பலன்

### 25-வது பாட்டு

அப்பனே இந்தகாரியம் பலியாதப்பா
அரியயன் வந்தபோதில் முடியாதப்பா
தப்பாது மரணமது உண்டுயிப்போ
தாரணியில் யெதிரிக்கு அனுகூலமாகும்
இப்பவே இதைப்பற்றி யோசிக்காதப்பா
யெதிரிகள் உந்தனுக்கு மெத்தவுண்டு
செப்பவே யெந்தகாரியம் பலியாதப்பா
ஜெகமதில் இதை நினைக்கவேண்டாமப்பா.

வசனம்:—இந்த காரியத்தைப்பற்றி நீ முயன்றால் பிரயோஜனமில்லை ஆனால் இதைப்பற்றி அரி அயன் வந்தபோதிலும் முடியாது. இந்தக் காரியம் யெதிரிக்கு அனுகூலமே தவிர உனக்கு பலிதமில்லை. மத்திபம்.

## இருபத்தி ஆறுவது வீட்டின் பலன்

### 26-வது பாட்டு

இன்பமுடன் யென்மொழியை கேளுமப்பா
யெடுத்துநான் சொல்லுகிறேன் சேதியொன்று
பண்புடனே நீ நினைத்த காரியமப்பா
பலிக்குமடா ஈரெட்டு தினத்தில்தானே
கண்புடனே குருகடாக்ஷ முனக்கேவுண்டு
நலிந்திட்ட பிணியது போகும் போகும்
தென்புடனே கோரிக்கை ஈடேருமப்பா
தெரிந்துயான் சொன்னேனிது வுண்மைதானே.

வசனம்:—இந்த வீட்டை தொட்டபடியால் உனக்கு குருகடாக்ஷ மிருக்கிறது. நீ யெண்ணமிட்ட காரியம் கைக்கூடும் துயரப்பட வேண்டாம் சுபம்.

## இருபத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 27-வது பாட்டு

அஞ்சாதே மகனே நீ இன்றுகேளாய்
அன்புடனே சொல்லுகிறேன் வார்த்தையொன்று
பஞ்சவரை கார்த்தளித்த கண்ணன் மருகன்
பரமனுட புதல்வனான கணேசர்தானும்
நெஞ்சார கிருபை செய்தார் வுந்தனுக்கு
நேரிட்ட விரோதியெல்லாம் வோடிப்போவார்
வஞ்சமது வொன்றுமில்லை நினைத்தக்காரியம்
வகையுடனே கைக்கூடும் நிச்சயம்தானே.

வசனம்:—கணேசருடைய அருளுனக்கு மெத்த வுண்டு. ஆனது பற்றி உன்னை விரோதித்த பகைவர்கள் வோடிப்போவார். நீ நினைத்த காரியமும் கைக்கூடும் சுபம்.

## இருபத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 28-வது பாட்டு

துயரமது கொள்ளாதப்பா மொழியைகேளாய்
சொல்லுகிறேன் உந்தனக்கு குறிப்புவொன்று
நியமுடனே சரீர சவுக்கிய முண்டாகுமப்பா
நீணிலத்தில் வருத்தமது தீர்ந்து நிற்பாய்
ஜெயமுடனே நினைத்தகாரியம் பலிக்குமப்பா
மனவருத்தம் வையாதே மனதிலின்று
பயமது வொன்றுமில்லை இடையூரின்றி
பாலகனே இதுவெல்லாம் கைக்கூடி நிற்கும்.

வசனம்:—உனக்கு மனதிலுள்ள வருத்தம் தீரும் திரேக சௌக்கிய முண்டாகும் செய்யத் துணிந்த காரியம் கைக்கூடும். நீ யாதொன்றுக்கும் பயப்படவேண்டாம் சுபம்.

## இருபத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 29-வது பாட்டு

எண்ணமிட்ட காரியமது பலியாதப்பா
ஈசனுட கடாக்ஷமது இல்லை இப்போ
திண்ணமுடன் அரசன்முன்னில் தோஷமுண்டு
தேடரியும் பொருளுக்கு தீமையுண்டு

பண்ணமுடன் குறிப்பிட்ட விஷயமெல்லாம்
பார் தனிலே நிமைவந்து சூழுமப்பா
மண்ணரி தன்னில் யெந்தகாரியம் பலியாதப்பா
மைந்தனே இந்த யெண்ணம் ஆகாதப்பா.

வசனம்:—நீ எண்ணிய காரியம் பலியாது. அரசன் முன்னில் உனக்கு கேடுசம்பவிக்கும். நீ யெந்தெந்த காரியம் செய்ய யெண்ணமிட்டாயோ அது யெல்லாம் வியர்த்தமாகும். இதை நம்பவேண்டாம். மத்திபம்.

## முப்பதாவது வீட்டின் பலன்

### 30-வது பாட்டு

மாதாலே பொருளுனக்கு மெத்தசேரும்
மைந்தனே பெண்வார்த்தை நீயும்கேளாய்
வேதனையால் தொலைதேசம் சென்றமனிதர்
வீடுவந்து சேருவாரிது வுண்மைதானே
சோதனைகள் வொன்றுமில்லை நினைத்தகாரியம்
சொகுசுடனே கைக்கூடும் நீயேசெல்வாய்
ஆதாரமிதுவே யென்று நம்பு நம்பு
அருள்கணேசன் கிருபையால் பிரசித்தமாமே.

வசனம்:—கணேசன் கிருபா கடாக்ஷத்தினால் நீ யெண்ணமிட்ட காரியம் கைகூடும் விரோதமடைந்துபோன மனிதர் வீடுவந்து சேருவர் ஓர் பெண்பாவையால் உனக்கு பொருளும் சேரும் சுபம்.

## முப்பத்தி ஓராவது வீட்டின் பலன்

### 31-வது பாட்டு

உன்னிதமா நீகேட்டப் பலனைச் சொல்வேன்
உத்தமனே வுறுதியுடன் மொழியைக்கேளும்
இன்னிலையில் விரோதமது உனக்கேயில்லை
எடுத்தகாரியம் கைக்கூடு முண்மைதானே
தன்னிகரில்லாமல் நீயும் வாழ்வாயப்பா
தரணிதனில் பொல்லாங்கு உனக்கேயில்லை
நன்னிலையில் மனஸ்தாபம் தீர்ந்துநீதான்
நலமுடனே வாழ்ந்திருப்பாய் நன்மைதானே.

வசனம்:—நீ உத்தேசித்த காரியம் உடனே கைக்கூடும் தெய்வ பலித முண்டு பொல்லாங்கு வொன்றுமில்லை சிரைநீங்கும் மனஸ்தாபம் நிர வேறும் இது உத்தமம்.

## முப்பத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 32-வது பாட்டு

ஏனப்பா இந்தவீட்டைத் தொட்டீர்நீதான்
இதனாலே பலனில்லை சொல்வேன் கேளீர்
தானமுடன் நீநினைந்த காரியமெல்லாம்
தாரணியில் கைக்கூடி நிற்காதப்பா
நானமற்றுமடி பிடித்து சண்டை செய்வார்
நால்வர்க்கும் விரோதியாகி நிற்பீரய்யா
கானமுடன் தீமைவந்து அடையுமப்பா
கர்த்தனுட கடாக்ஷமது இல்லையிப்போ.

வசனம்:—இப்போது நீ யெண்ணித் தொட்டக் காரியமாவது இச்சமயத்தில் கைக்கூடாது நீ யெங்கு சென்றாலும் உனக்கு மடிபிடிசண்டை யுண்டாகும் தீமையே உனக்கு சொந்தப்பொருளாக வந்துநிற்கும் இது அதமம்.

## முப்பத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 33-வது பாட்டு

கடவுளுடைய கிருபையுமில்லை வுந்தனுக்கு
கணிதமுடன் நவகிரஹ தோஷமுண்டு
படவுடனே நீநினைத்த காரியமெல்லாம்
பலியாது கைப்பொருளும் நஷ்டமாகும்
திடமுடனே விரோதமது மெத்தவுண்டு
திகைத்தப்பி நிற்பாயடா புவியின்மீது
மடத்தனமாய் செய்யாதப்பா யெந்தகாரியம்
மரியாதை போகுமடா வுந்தனுக்கு.

வசனம்:—நீ யிப்போது யெண்ணமிட்ட காரியம் பலியாது தெய்வ பலனும் நவகிரஹதோஷமும் உனக்குண்டு நீ குறிபிட்ட விஷயத்தால் தோஷமுண்டு வினையதிகரிக்கும் மத்திபம்.

## முப்பத்தி நான்காவது வீட்டின் பலன்

### 34-வது பாட்டு

ஏனப்பா இந்தவீட்டின் பலனைச்சொல்வேன்
இன்பமுடன் நீகேளாய் மைந்தாயின்று
கானமுடன் நீசெய்யும் வியாஜ்பமானல்
கனிவுடனே யெதிரிக்கு ஜெயமேயாகும்
தானமுடன் நீநினைந்த காரியமெல்லாம்
தாரணியில் பலியாது என்றுதானே
மானமுடன் இருந்துவிட்டால் நலமேயப்பா
மைந்தனே இதுவுண்மை யென்றறிவாய்.

வசனம்:—நீ கோரிய வியாஜ்யம் செய்யும் காரியமானது யெதிரிக்கு பலிதமேதவிர வுனக்குயேதும் பலியாது நீ அவமானமடைந்து நிற்பீர் மத்திபம்.

## முப்பத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 35-வது பாட்டு

அப்பனே துயரமது விட்டு நிற்பாய்
ஆனதொரு கைப்பொருளும் வந்தேசேரும்
இப்பவே குருகடாக்ஷ முனக்கேயுண்டு
இல்லறத்தில் வருத்தமது தீருமப்பா
செப்பவே விரோதமது வொன்றுமில்லை
ஜெகமதனில் புண்யமது யதிகமுண்டு
தப்பாது வுந்தனுக்கு இந்தக்காரியம்
தயவுடனே கடவுள்தான் கிருபைசெய்வார்.

வசனம்:—இந்த வீட்டின் பலனாவது உன் கைப்பொருளும் வந்து சேரும் உனக்கு குருகடாக்ஷம் யதிகரிக்கும் இல்லறத்தில் இருக்கப்பட்ட துயரம் தீரும் விரோதிகள் சமாதானமாவார் உனக்கு புண்யமுண்டு இந்தப் பலன் தப்பாது சுபம்.

## முப்பத்தி ஆறுவது வீட்டின் பலன்

### 36-வது பாட்டு

சென்றுவிட்டப் பொருளதுவும் வந்தேசேரும்
சிறப்புடனே இராகுமேகது விரோதமில்லை
அன்றுநீதான் நினைத்ததெல்லாம் பலிக்குமப்பா
அய்யனுட கடாக்ஷமது உனக்கேவுண்டு

இன்றுனக்கு பொல்லாங்கு வொன்றுமில்லை
இசைந்துமே சிறைநீங்கி சுகமடைவாய்
நன்றெனவே நீ இதைதான் மனதிலெண்ணு
நாரணன் மருகனுட கிருபைதானுண்டு.

வசனம்:—நீ இதை மனக்கவலை வையாதே உனக்கு இராகு கேது பலமுண்டு உத்தேசித்த காரியம் ஜெயமாகும் இப்போது பொல்லாப்பு மில்லை சுபம்.

## முப்பத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 37-வது பாட்டு

பெருமையுடன் நீதொட்ட வீட்டின் பலனை
பேசுகிறேன் இப்போது நீதான்கேளு
நிருபமுடன் குருகடாக்ஷ முனக்கேவுண்டு
நீணிலத்தில் நினைத்ததெல்லாம் வந்தேசேரும்
அருமையுடன் பலபொருள் கைக்கூடுமப்பா
அனந்தகோடி பாக்கியமது நீதான்பெற்றுய்
தருமமது உன்னுடனே கூட நிற்கும்
தாரணியில் மனக்கவலை தீருமிப்போ.

வசனம்:—நீ கோரிய வீட்டின் பலனுவது நன்மைவரும் பலப் பொருள் கைக்கூடும் போனப்பொருள் மீண்டுவரும் உனக்கு குருகடாக்ஷ மிருக்கிறது துயரப்படவேண்டாம் இது உத்தமமாகும்.

## முப்பத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 38-வது பாட்டு

உந்தனுக்கு தெய்வபலன் இல்லை இப்போ
உறுதியாக குருவுனக்கு விரோதியாச்சே
அந்தமாக பகையோர்கள் மெத்தவுண்டு
அவனிதன்னில் உன்னைக்கொல்ல யெண்ணமிட்டார்
பந்தமது நீசெய்தால் பலியாதப்பா
பழியுனக்கே சுமையாக நிற்கும் நிற்கும்
இந்தநல்ல யெண்ணமதை விட்டுவிடும்
இது வுனக்கு ஆகாது உண்மைதானே.

வசனம்:—நீ யெண்ணிய காரியத்தால் உனக்கு தெய்வபலன் இடை யாது குருவும் உனக்கு விரோதியாகும் உன்னைக் கொல்வதற்கு யெண்ண

மிட்ட பகையோர்கள் மெத்தவுண்டு ஆனால் பழி யதிகமாய் சமப்பீர் இந்த யெண்ணத்தை விட்டுவிட்டு மருவேலை பார்க்கவும் மத்திபம்.

## முப்பத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 39-வது பாட்டு

அப்பனே இந்தவீட்டின் பலனைச் சொல்வேன்
அன்புடனே நீ கேளுமின்று பாலா
ஒப்பரிய நினைத்த காரியம் கைக்கூடுமப்பா
உலகமதில் நினைத்ததெல்லாம் முடியும்பாலா
இப்பவோர் மனிதனாலே சிநேகம் செய்வாய்
இன்பமுடன் அவனாலே சுகமேவுண்டு
தப்பாமல் தூரம் சென்ற மனிதர்வருவார்
தாரணியில் இதுவுண்மை யென்றறிவீர்.

வசனம்:—நீ செய்யப்பட்ட காரியம் சுகமாய் முடியும் நினைத்த யெண்ணமாகப்பட்டது கைக்கூடும் தகுந்தவோர் மனிதரோடு நேசம் செய்வீர் அதனால் லாபமுண்டு தூலதூரம்சென்ற மனிதர் வீடுவந்து சேருவார் உத்தமம்

## நாற்பதாவது வீட்டின் பலன்

### 40-வது பாட்டு

உந்தனை விரோதம் செய்த பகையோரெல்லாம்
உண்மையுடன் சந்தோஷ மடைவாரப்பா
அந்தமாகக் கைப்பொருளும் நஷ்டமாகும்
அவனிதனில்கெட்டபேர் மெத்தவுண்டு
பந்தமது செய்திடுவார் கச்சேரிக்குத்தான்
பன்னமா போகவேணும் நீதானின்று
மந்தமதி வேண்டாமடா வுந்தனுக்கு
மைந்தனே இந்தகாரியம் நினைக்காதப்பா.

வசனம்:—நீ நினைத்தக் காரியத்தில் பகைவர் மெத்தவுண்டு கைப் பொருளும் நஷ்டமாகும் பூமியில் கெட்டபெயர் அடைகுவீர் கச்சேரிக்கு போகவும் வழிவரும் ஆகையால் இந்தக்காரியம் யெடுக்கவேண்டாம் மத்திபம்.

## நாற்பத்தி ஓராவது வீட்டின் பலன்

### 41-வது பாட்டு

இந்தக்காரியம் நினைத்துநீயும் யோசிக்காதே
இப்பவே நான் சொல்வேனுண்மைதானே
யெந்தநாளில் கூடாதப்பா உனது காரியம்
ஈசனுட அருளுனக்கு இல்லை இல்லை
சொந்தமான மனைவிமக்கள் விரோதமாவார்
சொல்லாமல் கைப்பொருள் நஷ்டமாகும்
பந்தமது செய்யாதே இப்போநீதான்
பலியாது யெந்தக்காரியம் வீணாய்ப்போகும்.

வசனம்:—நீர் இப்போது நினைத்தகாரியத்தில் பலித மொன்றுமில்லை உனக்கு மனைவிமக்கள் விரோதமாவார் கைப்பொருளும் நஷ்டமாகும்யெந்தக்காரியமும் பலிக்காது வீண்பிரயாசைப் படாதே மத்திபம்.

## நாற்பத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 42-வது பாட்டு

ஏழாவது வீட்டில்தானே சனியனின்று
இயல்புடனே குடியிருந்து வாழ்கின்றானே
பாழாக செய்வானப்பா பொருளையெல்லாம்
பண்புடனே வொண்டியாக நிற்கசெய்வான்
தாழான பேச்சியெல்லாம் கேட்டுநிற்பாய்
தரணிதனில் பகையோர்கள் மெத்தவுண்டு
வாழாமல் மனைவிமக்களை வெறுக்க செய்வான்
வையகத்திலிருந்த வீட்டின்பலன்தான் வேண்டாம்.

வசனம்:—அப்பா உனக்கு ஏழாவது வீட்டில் சனி இருப்பதால் யெந்தகாரியமும்பலியாது கைப்பொருளும் நஷ்டமாகும் தாழ்வானமொழிகள்கேட்டு நிற்பாய் உனக்கு விரோதமதிகமாகும் மனைவிமக்களை வெறுக்க செய்வான் ஆனதால் யெந்தக்காரியமும் நினைக்கவேண்டாம் மத்திபம்.

## நாற்பத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 43-வது பாட்டு

எப்படிதான் நீசெய்தால் இந்தகாரியம்
எதிரிக்கு பலிதமாகும் உனக்கேயில்லை

ஒப்பமுடன் கைப்பொருளும் நஷ்டமாகும்
உலகத்தில் பகையாளி நீயேயாவாய்
செப்பரிய குருபலன் உனக்கேயில்லை
சுகமொன் றுமில்லையடா தொழில்தன்னில்
அப்பனே இந்தகாரியம் பலியாதப்பா
ஆருக்குமே ஆகாது இந்தவீடு.

வசனம்:—நீ யெப்படியாகிலும் இந்த வியாஜ்யம் ஜெயிக்கவேண்டு மென்று மனமிட்டபோதிலும் யெதிரிக்கு ஜெயமாகும் உனக்கு பலித மாகாது கைப்பொருள் நஷ்டம் தொழில் கிடையாது மத்திபம்.

## நாற்பத்தி நான்காவது வீட்டின் பலன்

### 44-வது பாட்டு

தெய்வமது உன்மீது கருணை வைத்தார்
தேடியே உன்பொருளும் வந்தே சேரும்
வையகத்தி லுன்னைஜெயிக்க விரோதியில்லை
வாராத மனிதருமே வந்தே சேர்வார்
பையமுடன் நீனினைந்த காரியமெல்லாம்
பலிக்குமடா க்ஷணப்போதில் யெண்ணமிட்டால்
அய்யனுட கருணையாலே உனக்கேவந்த
அகடெல்லாம் தீர்ந்து சுகமனுபவிப்பாய்.

வசனம்:—உனக்கு தெய்வபலித மிருப்பதினுல் பொருள்வந்து சேரும் வையகத்தில் உன்னை ஜெயிக்க யெவராலு முடியாது நீயெடுத்தக் காரியம் கைக்கூடி சுகமடைவாய் சுபம்.

## நாற்பத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 45-வது பாட்டு

ஏவப்பா நீநினைத்து தொட்டவீட்டின்
இயல்பான பலத்தைச் சொல்வேன்கேளும்
தினமுடன் யெண்ணிவந்த காரியமிப்போ
தேடினுலும் பலிக்காது பொய்தானுகும்
நாணமன்றி மானம்போகும் நீயுமப்பா
நால்வருக்கும் பொய்யனென்று பேரெடுப்பாய்
கானமுடன் இந்த வீட்டின் பலன்தான்வேண்டாம்
கருத்திலிதை நினைக்கவேண்டாம் நீயுமப்பா.

வசனம்:—நீ நினைத்தக் காரியம் ஜெயமாகாது துன்பம் நேரிடும் பொல்லாங்கு விளையும் இந்த வீட்டின் பலன் வேண்டாம் மத்திபம்.

## நாற்பத்தி ஆறுவது வீட்டின் பலன்

### 46-வது பாட்டு

சொல்லவே குருவுனக்கு ஐந்தாம்வீட்டில்
சுகமுடனே இருப்பதாலே சொல்வேன்நானும்
பொல்லாப்பு மொன்றுமில்லை பெரியோர் சேவை
புகழுடனே நீயடைந்து லக்ஷ்மியோகம்
நில்லாமல் வந்தடைந்து சுகமேயாகும்
நீணிலத்தில் பெருமையொடு கீர்த்தியாகும்
கல்லாத தூரதேசம் சென்ற மனிதர்
கருத்துடனே வீடுவந்து சேர்வாரப்பா.

வசனம்:—உனக்கு குருபலன் ஐந்தாம் வீட்டில் யிருப்பதால் பல னுண்டாகும் பெரியோர் சேவை கிடைக்கும் லக்ஷ்மிகடாக்ஷமுண்டு பெருமை கீர்த்தி யதிகரிக்கும் தூரதேசம் சென்றமனிதர் வருவார் இது சுபமாகும்.

## நாற்பத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 47-வது பாட்டு

எதிரிக்கு இந்தகாரியம் பலியாதப்பா
இயல்புடனே அவன்கெட்டு போவானின்று
கெதியென்று உனைப்பணிவான் பகையாளியும்
கேட்டபொருள் வந்துசேரும் நன்மைதானே
மதியுடனே மாதாவுனக்கு பொருள்தான்சேரும்
மானிலத்தில் வியாதியது மெத்தவுண்டு
அதிபதியாய் தெய்வமது முன்னில்நின்று
ஆனதொரு கார்யமெல்லாம் கூட்டிவைக்கும்.

வசனம்:—உன்மீது யெதிர்த்து போர்செய்ய வந்ததோர் பகைவர் சாந்தமாவார் யெண்ணமிட்ட காரியம் கைக்கூடும் ஒரு பெண்பாவையால் லாபம் கிட்டும் தெய்வ முமக்கு கடாக்ஷம் செய்வார் சுபமாம்.

## நாற்பத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 48-வது பாட்டு

தெய்வமது செயலுமே வுந்தனுக்கு

நயமுடனே கேட்டவரம் பலிக்குமப்பா
நன்மையுடன் புத்திரபாக்கியம் மதிகரிக்கும்
பயமின்றி தரித்திரமது நீங்கும் நீங்கும்
பலபேர்கள் மனஸ்தாபம் அகலுமப்பா
மயமாக யெடுத்தக்காரியம் கைக்கூடுமே
மைந்தனே இதுவுண்மை யென்றறிவாய்.

வசனம்:—இப்போது நீ உத்தேசித்தக் காரியம் பலிதமாகும் தெய்வ கடாக்ஷமுண்டு புத்திரபாக்கிய மதிகரிக்கும் தரித்திரம் தொலையும் புவியில் மனஸ்தாபம் அகலும் யெடுத்தக் காரியமெல்லாம் தவறுமல் கைக்கூடும் இது சுபம்.

## நாற்பத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 49-வது பாட்டு

எண்ணிய காரியமது கைக்கூடுமப்பா
இடுக்கமது தீர்ந்துநீயும் சுகமடைவாய்
புண்ணிய வசத்தாலே உத்தனுக்கு
பிராணபயமேதுமில்லை சொன்னேனப்பா
மண்ணுலகில் மறைந்தபணம் வருமேயப்பா
மஹநீயர் சேவையது கிடைக்கும்தானே
நண்ணியதோர் கடவுளுடைய கிருபையாலே
நன்மையது உனக்கேவரும் சொன்னேனப்பா.

வசனம்:—நீதொட்டபலன் நன்மைவரும் பேசப்பட்ட காரியம் சித்திக்கும் இதர மனிதனுல் சந்தோஷமுண்டாகும் தெய்வ கடாக்ஷத்தால் நீ சுகமடைவீர் இது சுபமாம்.

## ஐம்பதாவது வீட்டின் பலன்

### 50-வது பாட்டு

கருதி நீதொட்டபலன் சொல்வேனப்பா
கனவருத்தமெத்தவுண்டு புவியின்மீது
மருவிய பேர்க்கள் மெத்தவுனக்குண்டாகும்
மாதராலே விரோதமது உண்டாய் நிற்கும்
அருமையாக நீ செய்யுந் தொழில்தன்னில்
அப்பனே விரோதமது மெத்தவுண்டு
பெருமையுடன் இதை நினைக்கவேண்டாமப்பா
பேய்போல அலைந்துநீயும் திரிந்திடுவாய்.

வசனம்:—நீ யெண்ணமிட்டக் காரியம் கைக்கூடாது யெந்த விஷயத்தைபற்றி முயன்றாலும் அபகீர்த்திநேரிடும் அடுத்த வீட்டுக்காரனால் வுனக்கு விரோத முண்டாகும் ஆகையால் இது மத்திபம்.

## ஐம்பத்தி ஒராவது வீட்டின் பலன்

### 51-வது பாட்டு

ஏனப்பா உன்தனக்கு மூன்றும் வீட்டில்
யெழிலுடனே செவ்வாயும் நிற்கின்றானே
தானப்பா யெடுத்தகாரியம் பலியாதப்பா
தன்மையுடன் திரேகத்தில் பிணிதான் சேரும்
நாணமில்லா கலகமது யதிகமாகும்
நலமுடனே யெந்தகாரிய முடியாதப்பா
பானமுடன் நினைத்துபோன விடமதன்னில்
பங்கமது நேரிட்டுத் துன்பமாகும்.

வசனம்:—உனக்கு மூன்றும் வீட்டில் செவ்வாய் இருப்பதால் நீ முயன்ற காரியம் முடியாது தேகத்தில் பிணிவந்து நேரிடும் கலகம் வரும் அதிக துன்பம் நேரிடும் போகுமிடத்தில் மனக்கவலை யதிகமாகும் இதனால் சுபம் கிடையாது மத்திபம்.

## ஐம்பத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 52-வது பாட்டு

ஆமப்பா இராகுகேது யெட்டில்தானே
அன்புடனே இருப்பதாலே வுந்தனுக்கு
தாமதமாய் முடியுமப்பா யெடுத்தகாரியம்
தரணிதனில் பொல்லாங்கு வந்தேசேரும்
நாமப்பா இருக்குமிடம் விட்டுவோட்டும்
நலமான அரசனாலே பயமேயாகும்
பாமப்பா யெதிரிக்கு அனுகூலமாகும்
பக்ஷமுடன் இந்தபலன் உனக்குவேண்டாம்.

வசனம்:—நீ நினைத்த காரியம் யெதிரிக்கு அனுகூலம் இராகுகேது வொன்றாயிருப்பதால் மனக்கவலை யடைவீர் அரசனால் துன்பம் நேரிடும் இருக்குமிடம் விட்டுவோட்டும் மனதில் யெண்ணமிட்டப் பொருள் கைகூடாது இது மத்திபம்.

## ஐம்பத்தி மூன்ருவது வீட்டின் பலன்

### 53-வது பாட்டு

கவலையது படவேண்டா மின்ருதானே
 கணேசரது கடாக்ஷமது உனக்கேவுண்டு
நவக்கிரஹ சாந்தியது செய்துக்கொள்வாய்
 நாடிநிற்கும் கார்யமது அனுகூலமாகும்
அவனிதன்னில் உந்தனுக்கு பொருளேகிட்டும்
 அகமதனில் சிவபூஜை நீயேசெய்வாய்
பவமது வொன்றுமில்லை நினைத்தகாரியம்
 பாலகனே கைக்கூடி சுகமடைவீர்.

வசனம்:—நீ யெண்ணமிட்ட காரியம் கணேசர் கடாக்ஷத்தினல் அனுகூலமாகும் பொருள் கிடைக்கும் ஆனல் நீ நவக்கிரஹசாந்தி செய்ய வேண்டியது இது சுபம்.

## ஐம்பத்தி நான்காவது வீட்டின் பலன்

### 54-வது பாட்டு

உந்தனுட வீட்டின்தெய்வ முமக்கேபகையாம்
 உத்தமனே யெடுத்தகாரியம் பலியாதப்பா
அந்தமான பொருளுனக்கு சேராதப்பா
 அவனியிலே பொல்லாங்கு வந்தேசேரும்
சொந்தமான மனிதருடன் விரோதமாவீர்
 சொல்லாமல் வீட்டைவிட்டு வோடிநிற்பாய்
தந்திரங்கள் யேதுமில்லை சொன்னேனப்பா
 தரணிதனில இந்தயெண்ணம் வேண்டாம்போடா.

வசனம்:—உனது வீட்டின் தெய்வத்தால் பகையாகும், பொருளும் நஷ்டம் பொல்லாங்கு நேரிடும் சொந்தமனிதருக்கு விரோதமாவாய் வீட்டை விட்டோட எண்ணமிடுவீர் ஆகையால் யெந்தகாரியமும் பலியாது இது மத்திபம்.

## ஐம்பத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 55-வது பாட்டு

அவனிதனில் உனக்கிடு ஆர்தானுண்டு
 அப்பனே வுந்தனுக்கு ரெண்டில் சந்திரன்

தவமுடனே யெடுத்தகாரியம் பலிக்குமப்பா
தாரணியில் கணேசருட கடாக்ஷமுண்டு
பவமுடனே சென்றபொருள் வந்தேசேரும்
பக்ஷமுடன் குடும்பமது பெருகிவாழும்
நவமுடனே கஷ்டமெல்லாம் தீருமப்பா
நாடிப்போகும் காரியமது கைக்கூடிநிற்கும்.

வசனம்:—உனக்கு இரண்டாம் வீட்டில் சந்திரன் இருப்பதால் யெடுத்த காரியம் பலிக்கும் குடும்பம் விர்த்தியாகும் சென்ற பொருள் வந்து சேரும் கஷ்டமணுகாது யெந்தகாரியம் செய்ய வுத்தேச மடைந்தாயோ அந்த காரியம் பலிதமாகும் இது சுபம்.

## ஐம்பத்தி ஆருவது வீட்டின் பலன்

## 56-வது பாட்டு

உந்தனை கெடுக்கவேதான் அநேககோடி
உலகமதில் மனிதரெல்லாம் வொன்றாய்ச்சேர்ந்தார்
அந்தமாக அவர்கெட்டுப்போவார் நீயும்
அவனிதனில் உனக்கு பயமேதுமில்லை
சொந்தமான பொருள்வந்து சேருமப்பா
சுந்திரனே அதிகலாப முமக்கேவுண்டு
யெந்தகாரியம் யெடுத்துநீதான் செய்தபோதில்
யேதும் பயமில்லையடா கைக்கூடிநிற்கும்.

வசனம்:—உன்னை கெடுக்க யெண்ணமிட்டார் கெட்டுப்போவார் உனக்கு யேதும் பயமில்லை கணேசர் கருணை யதிகமுண்டு. லாப மதிகரிக்கும் பொருள் வந்து சேரும் யெடுத்த காரியம் கைக்கூடி நிற்கும் இது சுபம்.

## ஐம்பத்தி ஏழாவது வீட்டின் பலன்

## 57-வது பாட்டு

அப்பனே இந்தவீட்டின் பலனைச்சொல்வேன்
அறிந்திடுவாய் யெந்தன்மொழி இன்றுதான
செப்பரிய யெந்தகாரியம் பலியாதப்பா
ஜெகமதனில் பிராணபய முமக்கேவுண்டு
கப்பிய ஐஸ்வர்யமது நிலைநிற்காது
கடுகவே பொல்லாங்கு உன்னைச்சேரும்
ஒப்பவே இந்தகாரியம் பலியாதப்பா
உறுதியாக யென்மொழியை நம்புநம்பு.

வசனம்:—நீர் யெந்தகாரியம் நினைத்து தொட்டீரோ யந்தக்காரியம் கெடுதியாகும் ஐஸ்வரியம் நிலைநிற்காது பிராணபயமாகும். யெந்த காரியமும் பலியாது மத்திபம்.

## ஐம்பத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 58-வது பாட்டு

ஏனப்பா துயரமது படவும்வேண்டாம்
இயல்புடனே நல்லபல னுனக்கேவுண்டு
தானமுடன் தெய்வபலன் உனக்கேகிட்டும்
தாரணியி லெடுத்தகாரியம் கூடுமப்பா
காணாத மனிதருமே வந்தேசேர்வார்
கனமுடனே திரேக மாரோக்யமுண்டு
நானமுடன் பொருள்வந்து சேருமப்பா
நலியாதே உன்மனதில் கலக்கம்வேண்டாம்.

வசனம்:—நீ இப்போது எண்ணமிட்டு தொட்ட வீட்டின்பலன் யேதென்றால் யெடுத்தக்காரியம் கைக்கூடும் தெய்வபலமுண்டு. திரேகத்திற்கு ஆரோக்கிய முண்டாகும் தொலைதூரத்திலிருந்து பொருள்சேரும் மனிதர் வருவார் இது சுபம்.

## ஐம்பத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 59-வது பாட்டு

அந்தமாக நீர்செய்யும் காரியமப்பா
அவனிதனில் கலக்கமன்றி தீருமப்பா
பந்தமிட்ட விரோதரெல்லாம் உன்னைக்கண்டால்
பார்தனிலே சந்தோஷமடைந்துநிற்பார்
உந்தனுக்கு நேர்ந்ததொரு துன்பம்தீரும்
உலகமதில் வேளாண்மை யதிகமாகும்
சந்தோஷமடைகுவீ ரெக்காரியம் செய்தால்
சங்கடத்தை விட்டுவிடு மனதில்தானே.

வசனம்:—இப்போது நீ குறிப்பிட்ட வீட்டின் பலன் யாதெனில் யெந்த காரியம் செய்தபோதிலும் நன்மைவரும் உனக்கு நேர்ந்த துன்பம் தீரும் சத்துரு பயம் கிடையாது சந்தோஷமடைவீர் வேளாண்மை யதிகரிக்கும்இது சுபம்.

## அறுபதாவது வீட்டின் பலன்

### 60-வது பாட்டு

சீர்மையுடன் நீசெய்யத் துணிந்தகாரியம்
ஜெயமில்லை யெதுசெய்தால் கெட்டுப்போகும்
நேர்மையுடன் கலகமுண்டு பொருளும்நஷ்டம்
நேர்ந்த பந்துமக்களுடன் விரோதமுண்டு
பார்புகழும் மாதுமுன்னை வெறுத்து நிற்பாள்
பலபேர்க்கு விரோதியென பெயரெடுப்பாய்
ஆர்வுனக்கு துணையுமில்லை யெண்ணமிட்டால்
அப்பனே இப்பலன் தான் வேண்டாமின்று.

வசனம்:—நீர் வீண் ஆசைப்படவேண்டாம் யெடுத்தகாரியம் கெட்டுப் போகும் தொழிலில் கலகமுண்டாகும் பொருள் நஷ்டமடையும் பந்து ஜனத்திற்கு விரோதியாகுவீர் மாலையிட்ட மாதுக்கு மனக்குரோதமுண்டு ஸ்ரீ கணேசர் உனக்கு நேர் விரோதியானபடியால் யெந்தக்காரியமும் கைக்கூடி நிற்காது மத்திபம்.

## அறுபத்தி ஒராவது வீட்டின் பலன்

### 61-வது பாட்டு

சத்குரு கடாக்ஷமது இருப்பதாலே
சார்ந்திட்ட மனிதரெல்லாம் சார்ந்துநிற்பார்
உத்தேசம் செய்திட்ட காரியமெல்லாம்
உலகமதில் புகழ்பெற்று வோங்கிவாழ்வாய்
சித்தமது கலங்காதே பெரியோர்சேவை
செய்துநீயும் சுகமடைவாய் விரோதமில்லை
யெத்திசையும் சென்றாலும் ஜெயமுண்டாகும்
யெழில் கணேசன்கிருபை மெத்தவுண்டு.

வசனம்:—சற்குரு கடாக்ஷ முனக்கு இருப்பதால் நீர் செய்ய உத்தேச மடைந்த காரியம் பலிதமாகும் பெரியோர் அனுகிரஹத்தால் சுப முண்டாகும் விரோதமடைந்தவர் உறவாவார் யெத்திசை சென்றாலும் ஜெயமடைவீர் சுபம்.

## அறுபத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 62-வது பாட்டு

எந்தகாரியம் நீசெய்ய மனமிட்டாயோ
இயல்புடனே அக்காரியம் பலிதமாகி

அந்தமாகநீயெங்கு சென்றபோதில்
அடையாத கியாதியது யடைந்துநிற்பாய்
சொந்தமான மதியுனக்கு நிலையில்நிற்கும்
சோர்ந்துவிட்ட கைப்பொருளும் வந்துசேரும்
பந்தமுடன் வேந்தர்சேவை நீயுமப்பா
பார்த்திடுவாய் கணேசருட கடாக்ஷத்தாலே.

வசனம்:—ஸ்ரீ கணேசர் கருணைகடாக்ஷத்தினால் நீர் யெந்த காரியம் செய்ய விரும்பினீரோ யந்தக்காரியம் பலிக்கும் யெங்கு சென்ற போதிலும் உனக்கு விரோதமில்லை. புத்தி நிலைநிற்கும் பார்க்காத வேந்தர் சேவை நீ காண்பாய் இது சுபம்.

## அறுபத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 63-வது பாட்டு

இப்பவே நீதொட்ட வீட்டின்பலனை
இன்பமாய் சொல்லுகிறேன் நீதான்கேளு
அப்பனே மானிரமடைந்த மனிதரோடு
அன்பாக விரோதமது யதிகமாகும்
செப்பரிய தொலைதூரம் சென்றமனிதர்
சேரவேவந்திட வெகுநாள்தான் செல்லும்
கப்பிய திரேகத்தில் யமைந்தவியாதி
கருக்குடனே தீராது உண்மைசொன்னேன்.

வசனம்:—இப்போது நீண்டிய பலன் யாதென்றால் மானிர முடைய மனிதனோடு உனக்கு விரோதமுண்டு அவனால் கெடுதி சம்பவிக்கும் தொலை தூரம் போன மனிதர் வரப்போகிறதில்லை நாள் செல்லும் உன் திரேகத்தில் அமைந்திருக்கும் வியாதியானது தொந்தரவு செய்யும் இது மத்திமம்.

## அறுபத்தி நான்காவது வீட்டின் பலன்

### 64-வது பாட்டு

நாடிநிற்கும் கார்யமது பலிக்குமப்பா
நலமுடனே விடவேண்டாம் முடியுமப்பா
தேடியதோர் துயரமது தீருமப்பா
தெய்வமது கடாக்ஷமது யிட்டாரிபபோ
ஆடியதோர் மாதாலே கஷ்டம்தீரும்
அப்பனே சென்றபொருள் வந்துசேரும்

பாடி நீசென்று லெங்கும் கியாதியுண்டு
பலதொழிலும் கைக்கூடி நிற்குமப்பா.

வசனம்:— நீ நாடிவந்த காரியம் பலிதமாகும் துயரம்தீரும் உன் குல தேவதை சகாயமுண்டு ஓர் பெண்பாவையால் கஷ்டம் தீரும் யெடுத்த காரியம் முடியும். இது சுபம்.

## அறுபத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 65-வது பாட்டு

கெடுக்க மனமிட்டமனிதர் கெட்டுப்போவார்
கிருபையுடனே உனதுகார்யம் பலிதமாகும்
நடுவான சுடர்வொளியாய் ஆடும்ஜோதி
நாதருன்மேல் மனமிட்டார் மனதுவைத்து
படுவான வுலகத்தோர்க்கு விரோதமில்லை
பலபொருளும் வந்துசேரும் பான்மையாக
கடுவான இராஜபய முனக்கேயில்லை
கவலையது கொள்ளாதே மனதிலிப்போ.

வசனம்:—நீ உன்னைக் கெடுக்க வேண்டுமென்று யெண்ணமிட்டு இருக்கப்பட்ட மனிதர் கெட்டுப்போவார் நீர் யெக்காரியம் செய்த போதிலும் நன்மையாய் முடியும் உலகத்தோருக்கு விரோதமில்லாமல் வாழ்வாய் இராஜபய மூமக்கு கிடையாது இது சுபம்.

## அறுபத்தி ஆறுவது வீட்டின் பலன்

### 66-வது பாட்டு

இச்சையுடன் நீசெய்யும் கார்யமெல்லாம்
இப்போதுக் கைக்கூடி நிற்காதப்பா
நிச்சையுடன் யெதிரிக்கு விரோதியாவாய்
நிலைமையுடன் கைப்பொருள் நஷ்டமாகும்
அச்சமில்லா பகையுனக்கு வந்தேசேரும்
அவனியிலேமாதாலே விரோதமுண்டு
பட்சமுடன் மறுதேசம் நீயேசெல்வாய்
பார்க்காதே யிந்தவீட்டின் பலனையப்பா.

வசனம்:—நீ இப்போது செய்யத் துணிவுக்கொண்டக் காரியம் பலியாது யெதிரிக்கு விரோதியாகுவாய் கைப்பொருள் நஷ்டமாகும். பெருத்த பகை விளையும் மனக்கவலை யடைவாய் மறுதேசம் செல்வாய் மாதால் விரோதமுண்டாகும் இது மத்திபம்.

## அறுபத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 67-வது பாட்டு

அப்பனே நீயிந்தக் காரியம் தன்னை
அன்புடனே செய்வாயாகில் ஜெயமுண்டாகும்
ஒப்பவே உன்மனதில் பயமேமெத்த
உறுதியாக யெண்ணமிட்டா யதனைவிடு
செப்பரிய மனிதருடன் கூடிவாழ்வாய்
சுகமுண்டு வுந்தனுக்கு சுகமேயாகும்
இப்பவே முன்செய்த தொழில்தன்னை
இச்சையுடன் செய்குவாய் நன்மைதானே.

வசனம்:—இப்போது எண்ணமிட்டக் காரியத்தை செய்தால் ஜெய முண்டாகும் மனதில் பயமடைந்து நிற்கின்றாய் அதனை விட்டுவிடு சொந்த மனிதருடன் கூடி சுகமாய் வாழ்வாய் முன்னால் நீ செய்துக்கொண்டிருந்த தொழிலை விடவேண்டாம் லாபமுண்டு சுகமாம்.

## அறுபத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 68-வது பாட்டு

அந்தமாக உன்னுடைய தெய்வம்தன்னை
அன்புடனே நீதுதித்து வருவாயின்னும்
சொந்தமாக நவக்கிரஹத்தின் கோவில்சென்று
சுத்திவந்து பூசைசெய்தால் பலன்தானுண்டு
பந்தமில்லா பொருளுனக்கு வந்தேசேரும்
பலபேரும் நல்லவனென்று பேசிக்கொள்வார்
மந்தமதி விட்டுநீயும் கணேசர்தன்னை
மானிலத்தில் பூசைசெய்தால் நன்மைதானே.

வசனம்:—நீர் இப்போ தொட்டப் பலன் யேதென்றால் உனது குல தேவதைகளை நினைப்பதில்லை யதனை தியானித்தாலும் நவக்கிரஹ கோவிலுக்குச் சென்று சுற்றி வந்தாலும் கணேசர் பூஜை செய்தாலும் போன பொருள் வந்தேசேரும் நல்லவனென்று பெயரெடுப்பாய் இது சுபமாம்.

## அறுபத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 69-வது பாட்டு

அப்பனே வுந்தனுக்கு மூன்றும்வீட்டில்
அன்பாக குடியிருந்தான் செவ்வாய்தானே

ஒப்பரிய வந்தபிணி தீராதப்பா
உலகத்தில் யதிகதுன்பம் நீயடைவாய்
செப்பரிய கைப்பொருளும் நஷ்டமாகும்
செய்யவே யெடுத்தகாரிய மாகாதப்பா
இப்பவேநினைத்து போகும் இடத்தில்தானே
இல்லாத மனக்கவலை நீயடைவாய்.

வசனம்:—இப்போது உனக்கு மூன்றும் வீட்டில் செவ்வாயிருப்பதால் உனக்கு வந்த வியாதியானது ஒருபோதும் தீராது நீர் துன்பத்திற்கு ஆளாகுவீர் உனது கைப்பொருளும் நஷ்டமடையும் யெடுத்த காரியம் பலியாது இப்போது எக்காரியம் செய்ய மனமிட்டீரோ அந்தக் காரியமானது அபஜெயமடைந்து துன்பப் படுவீர் இது மத்திபம்.

## எழுபதாவது வீட்டின் பலன்

### 70-வது பாட்டு

பார்த்தாயா இந்தவீட்டின் பலன்தானின்று
பக்ஷமுடன் யெடுத்தோதுவே னுந்தனுக்கு
கார்த்திட தெய்வமது வந்தேநிற்கும்
கனிவுடனே கைப்பொருளும் சேருமையா
ஆர்த்திட துயரமது போகுமுன்னை
அடர்ந்ததோர் சனியனின்று தூரநிற்பான்
நீர்த்திட புத்திரபாக்கிய மதிகரிக்கும்
நெஞ்சமதில் கலக்கமது வேண்டாமப்பா.

வசனம்:—உனக்கு தெய்வபலித முண்டு துயரம்தீரும் சோர்ந்திட்டப் பொருள் வந்தடையும் சனியன் நன்மையாக நிற்பான் புத்திரபாக்கிய மதிகமாகும் நீ துயரப்படவேண்டாம் இதுஉத்தமம்.

## எழுபத்தி ஓராவது வீட்டின் பலன்

### 71-வது பாட்டு

நம்பின மனிதரெல்லாம் கைசோரவிட்டார்
நலமில்லை தொழில்தன்னில் உனக்கேஇப்போ
தெம்புடனே துயரமது யதிகமாச்சு
தேடிய பொருளுனக்கு நஷ்டமாச்சு
வம்புவொன்று மில்லாமல் உனக்கேவீட்டில்
வழக்குமெத்த உண்டாச்சு உண்மைதானே

உம்பருட கடாக்ஷத்தாலே துயரம்நீர்ந்து
உலகத்தில் சுகமடைவா யின்றுநீதான்.

வசனம்:—நீ இப்போது தொட்ட வீட்டின்பலன்யேதென்றால் நீ யதிகமாய் மனவருத்தமடைந்தாய் நினைந்த காரியமெல்லாம் நஷ்டமடைந்துவிட்டாய் உனக்கு வீட்டிலும் சுகமிடையாது ஆனால் இனி பகவான் அருட்கடாக்ஷத்தினால் உன் துயரந்தீர்ந்து சுகப்படுவீர் நீ யேதுக்கும் பயப்பட வேண்டாம் இது உத்தமம்.

## எழுபத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 72-வது பாட்டு

அப்பனே வுந்தனுக்கு இராகுகேது
அடந்ததோர் சனியுனக்கு விரோதிபாச்சே
இப்பவே யெடுத்தக்காரியம் பலியாதப்பா
இபல்புடனே அனைவருக்கும் விரோதிநீதான்
செப்பரிய பொருளுன்கையில் நிற்காதப்பா
ஜெகமெங்கும் திரிந்துநீயும் உலந்துநிற்பாய்
ஒப்பரிய குருதெய்வ பக்தியில்லை
உத்தமனே யெந்தகாரியம் பலியாதப்பா.

வசனம்:—இப்போது உந்தனுக்கு இராகு, கேது சனி இந்த மூவரும் விரோதமடைந்தார் அகையால் அனைவருக்கும் விரோதமாவாய் பொருளும் கையில் நில்லாது உகலமெங்கும் திரிந்து அலைச்சலுண்டாகும் மேலும் குரு தெய்வப் பக்தியில்லை நீ யெந்தக்காரியம் செய்தபோதிலும் பலியாது இது மத்திபம்.

## எழுபத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 73-வது பாட்டு

வியாபாரம் செய்யநீதான் விரும்பியிப்போ
வேகமுடன் தொட்டாயடா யிந்தவீட்டை
நியமுடனே விர்த்தியாகி உனக்கேயின்று
நிகழ்பலன்தான் கிட்டுமப்பா நம்பிசெய்வாய்
பயமில்லை சினேகிதனால் வீட்டுக்காரியம்
பண்புடனே நன்மையாகி புத்திரபாக்கியம்
தயவுடனே உண்டாகி நீதானப்பா
தாணிதனில் சுகமடைவாய் நம்புநம்பு.

வசனம்:—நீ இப்போது வியாபாரம் செய்ய மனமிட்டாய் யது விர்த்தியாகும் தனலாபம் கிடைக்கும் சுகுணமடைந்த சிநேகிதனுல் உன் வீட்டுக்காரியம் நன்லையாகி பெருகும் புத்திரபாக்கிய மதிகரிக்கும் நீ யேதுக்கும் துயரப்படவேண்டாம் இது உத்தமம்.

## எழுபத்தி நான்காவது வீட்டின் பலன்

### 74-வது பாட்டு

தனிமையுடன் உன்மனதில் யெண்ணமிட்ட
 தர்பரனே உன்காரிய முடியுமப்பா
இனிமையுடன் பெரியோரால் உதவியாகும்
 இல்லறத்தின் வியாஜ்யமது விட்டேபோகும்
அனிமையுடன் சென்றபொருள் வந்தேசேரும்
 அவனியிலே குலதெய்வம் பூசைசெய்வாய்
நனிமையுடன் குருகடாக்ஷ முமக்கேவுண்டு
 நன்மையாகு மெந்தக்காரியம் செய்தாலபம்.

வசனம்:—உன் மனதில் யெண்ணமிட்டக்காரியம் ஜெயமாகும் பெரியோர் உதவியால் வீட்டுக்காரியம் பூர்த்தியாகும் ஒருவரிடம் போனப் பொருள் வந்துசேரும் உன் குலதேவதைக்கு பூஜைப்போடவும் குரு கடாக்ஷ மிருக்கிறது துயரமடைய வேண்டாம் யெந்தக்காரியமும் முடியும் உத்தமம்.

## எழுபத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 75-வது பாட்டு

சித்தமதில் இவ்வீட்டை யெண்ணவேண்டாம்
 சிறப்புள்ள பொருள் நஷ்டமாகி நிற்கும்
உத்தமனே உன்மனைவி விரோதியாவாள்
 உலகத்தில் பகையாளி நீயாய்நிற்பாய்
அத்தி கணராஜனுட கடாக்ஷமில்லை
 அவனிதனில் யெடுத்தகாரியம் முடியாதப்பா
சுத்தமுடன் கைத்தொழிலும் போகுமப்பா
 சுந்திரனே இதுவுண்மை நம்பிநில்லும்.

வசனம்:—நீ யெந்தக்காரியம் செய்ய உத்தேச மடைந்தாயோ யது ஆகாது பொருளும் நஷ்டமாகும் கொண்ட மனைவிக்கு விரோதியாகுவீர் உலகத்தில் பகை மெத்தவுண்டு செய்தொழிலும் விட்டுப்போகும் இது மத்திமமென்று அறிவீர்.

## எழுபத்தி ஆருவது வீட்டின் பலன்

### 76-வது பாட்டு

நாட்டமுடன் நினைத்தகாரியம் பலிக்குமப்பா
நலமுடனே வியாபார மதிகமாகும்
வாட்டமுடன் யெதிரியெல்லாம் வணங்கிநிற்பார்
வாயொன்றும் பேசாரே உம்மைக்கண்டால்
நீட்டமுடன் திரேகமதில் பிடித்தவியாதி
நிமிஷத்தில் விட்டுப்போகு முமக்கேயின்று
ஆட்டமுடன் குருகடாக்ஷ முமக்கேயுண்டு
அவனிதனில் யெக்காரிய முடியும்பாரே.

வசனம்:—நீ யெந்தக்காரியம் செய்ய யெண்ண மிட்டாயோ அக் காரியம் முடியும் வியாபார மதிகரிக்கும் திரேகத்தில் பிடித்த வியாதி யானது கூடிய சீக்கிரத்தில் விட்டுப்போகும் யெதிரி விரோதமில்லை குரு கடாக்ஷம் உனக்கு யதிகரித்து இருக்கிறது யெந்தக்காரியமும் கைக்கூடும் இது உத்தமம்.

## எழுபத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 77 -வது பாட்டு

சீராகக் கலியாண முடியுமப்பா
சிறந்துஇப்போ தனபாக்கியம் கூடிசேரும்
வேராக நினைந்திட்ட அண்ணன் தம்பி
வெருப்பின்றி உன்னுடனே கூடிவாழ்வார்
நேராக பந்துக்களும் உதவிசெய்வார்
நீணிலத்தில் துயரமது விட்டுநிற்பாய்
மாராத மனிதருமே வந்து சேர்வார்
பக்ஷமுடன் நினைந்தகாரியம் கூடிநிற்கும்.

வசனம்:—நீ இப்போது கலியாணம் முடியுமா யென்று மனமிட்டு தொட்டதால் இக்காரிய முடியும் விரோதமா யிருந்த அண்ணன் தம்பிமார் கூடி வாழ்வார் பந்துக்கள் உதவி செய்வார் பாராத மனிதர் வந்து சேர்வார் நீயெந்தக்காரியம் செய்ய மனமிட்டீரோ யந்தக்காரியம் கூடும் உத்தமம்.

## எழுபத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 78-வது பாட்டு

பாரடா இந்தவீட்டின் பலனைச்சொல்வேன்
பண்புடனே யெக்காரியம் பலியாதப்பா

சேரவே குருகடாக்ஷ மூனக்கோயில்லை
ஜெகமதனில் பொல்லாங்கு மெத்தவுண்டு
கோரவே கைப்பொருளும் நஷ்டமாகும்
கூடியதோர் மாதாலே விரோதமுண்டு
நோரகபோனபோதில் விடாதுவுன்னை
நிற்கின்றான் யேழுதனில் சனியன் தானே.

வசனம்:—உனக்கு சனி யேழில் இருப்பதால் யெங்கு சென்றபோதிலும் துன்பம் விளையும் ஓர் மாதால் அபகீர்த்தியடைவாய் பொல்லாங்கு நேரிடும் உனக்கு குருகடாக்ஷமும் கிடையாது ஆகையால் யெடுத்த காரியம் செய்ய முயலவேண்டாம் இது மத்திபம்.

## எழுபத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 79-வது பாட்டு

ஒருவனை நீநம்பி யின்றுபுவியின்மீது
உத்தமனே நிற்கின்றாய் அவனால்கேடு
பெருமையுடன் வுனக்குகிட்டும் நம்பவேண்டாம்
பேசாமல் விவாகமது முடியுமப்பா
அருமையுடன் நீசெய்யும் காரியமெல்லாம்
அன்புடனே கைக்கூடி நிற்குமப்பா
கருமமது துலைந்துநீயும் சுகமடைவீர்
கர்த்தனுட அருளுனக்கு மெத்தவுண்டு.

வசனம்:—நீ ஓர் சிநேகிதனை நம்பி இருக்கின்றாய் அவனால் உனக்கு கெடுதி சம்பவிக்கும் அந்த சிநேகிதம் விட்டுவிடு கலியாணம் கூடும் உனக்கு நேர்ந்த கருமமது தொலைந்து சுகமடைவீர் ஆனால் யெந்தகாரியம் செய்தபோதிலும் ஜெயமுண்டு இது உத்தமம்.

## எண்பதாவது வீட்டின் பலன்

### 80-வது பாட்டு

துபயமது கொள்ளாதப்பா மனதில்தானே
துரிதமுடன் சென்றுவிட்ட பொருளும் சேரும்
பயமது விட்டுநீதான் திரிந்துநிற்பாய்
பார்தனிலே யெதிராளி வெட்கிநிற்பான்
நயமுடனே மனக்கவலை தீருமப்பா
நாடியதோர் கைத்தொழிலும் கூடநிற்கும்

தயவுடனே கணேசர் தன்னை பூசைசெய்வாய்
தரித்திரமது விட்டுநீயும் சுகமடைவாய்.

வசனம்:—ஸ்ரீ கணேசனை பூசை செய்துக்கொண்டு வந்தால் உனக்கு நேரும் துன்பம் தொலையும் கைத்தொழிலும் கூடிவரும் மனக்கவலை தீரும் யெதிராளி வோடிப்போவான் தோர்வையடைந்த பொருளும் வந்துசேரும் இது உத்தமம்.

## எண்பத்தி ஒராவது வீட்டின் பலன்

### 81-வது பாட்டு

மைந்தனே நவக்கிரஹங்கள் போதாதப்பா
மானிலத்தில் உனக்கேதான் விரோதமுண்டு
அந்தமுள்ள லக்ஷ்மியவள் தூரம்சென்றாள்
அருமையான மக்களுடன் விரோதமாவாய்
பந்தமது செய்தாலும் பலியாதப்பா
பக்ஷமுடன் யெடுத்தகாரியம் கூடாதின்று
சொந்தமான மாதாலுனக்கு துன்பமுண்டு
சுந்திரனே இதைநீதான் எண்ணவேண்டாம்.

வசனம்:—உனக்கு நவக்கிரஹ பலிதமில்லாதபடியால் யெங்கும் விரோதமுண்டு லக்ஷ்மி தொலைதூரம் சென்றாள் நீ செய்யவேண்டுமென்று முயன்று செய்யும் காரியம் முடியாது சொந்த மாதாலுனக்கு பகைவுண்டு இந்தப் பலனை விட்டுவிடும் இது மத்திபம்.

## எண்பத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 82-வது பாட்டு

இஷ்டமுடன் தொட்டபலன் சொல்வேன்கேளாய்
இன்பமுடன் குருகடாக்ஷ முனக்கேவுண்டு
அஷ்டலக்ஷ்மி யோகமது கிடைக்குமப்பா
அவனியிலே தோற்றபொருள் வந்துசேரும்
நஷ்டமது இல்லையடா வியாபாரந்தன்னில்
நலிந்திட்ட பிணியது விட்டேதீரும்
கஷ்டமெல்லாம் தீர்ந்துநீதான் சுகமடைவாய்
கர்த்தனது கருணையது உன்மேலுண்டு.

வசனம்:—நீ இப்போது தொட்டவீட்டின் பலன் யேதென்றால் உனக்கு குருகடாக்ஷ மிருக்கிறது ஆகையால் லக்ஷ்மியோகமுண்டு

தோர்வை யடைந்த பொருளும் வந்துசேரும் வியாபாரத்தில் லாபம் கிடைக்கும் கஷ்டமெல்லாம் தீர்ந்து சுகமடைவாய் இது உத்தமம்.

## எண்பத்தி மூன்ருவது வீட்டின் பலன்

### 83-வது பாட்டு

அப்பனே நீநினைந்தக் காரியமெல்லாம்
அன்புடனே கைக்கூடி சுகமடைவாய்
செப்பரிய பொருள்வந்து சேருமப்பா
ஜெகமதனில் வியாபார மதிகரிக்கும்
ஒப்பில்லா பெரியோரின் சேவைசெய்வாய்
உலகமதில் விரோதிகள் உனக்கேயில்லை
கப்பியதோர் துயரமது தீருமப்பா
கன்னியாலே வுந்தனுக்கு லாபமுண்டு.

வசனம்:—நீ கோரி இருக்கப்பட்ட காரியம் கூடிய சீக்கிரத்தில் கைக் கூடும் பொருள் வந்து சேரும் உனது வியாபார மதிகரிக்கும் பெரியோர் சேவை யதிகரிக்கும் உனக்கு யெங்கும் விரோதமில்லை துயரம் தீரும் ஒரு பெண்பாவையால் லாபமுண்டு இது உத்தமம்.

## எண்பத்தி நான்காவது வீட்டின் பலன்

### 84-வது பாட்டு

பொங்கமுடன் யெண்ணமிட்ட காரியமிப்போ
புவிதனிலே கூடாது குருபலனேயில்லை.
மங்களமாய் நீசென்ருல் விரோதமுண்டு
மாதாலே பெருந்துன்பம் வந்தேசேரும்
யெங்குமில்லா கைவிலங்கு உனக்கேகிட்டும்
யேதென்றுச் சொல்வேனப்பா பொருளும்நஷ்டம்
சங்கரனுர் புதல்வனுன கணேசருடைய
சகாயமது உனக்கில்லை பலியாதப்பா.

வசனம்:—ஸ்ரீகணேசருடைய கடாக்ஷமும் கிடையாது குருவினுடைய அருளுமில்லை யெந்தக்காரியம் செய்தாலும் பலியாது கைப்பொருள் நஷ்டம் துன்பம் நேரிடும் விரோதமெத்தவுண்டு கைகளுக்கு விலங்குகிட்டும் மாதாலே அபகீர்த்தி நேரிடும் மத்திமம்.

## எண்பத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 85-வது பாட்டு

கைப்பொருளை தேடநீதான் எண்ணமிட்டாய்
 கருணையுடன் வந்துசேரும் மனையில்தானே
ஒப்பரிய மக்கள்பாக்கியம் பெருவாயப்பா
 உலகமதில் விரோதமது உனக்கேயில்லை
செப்பரிய யெடுத்தகாரியம் கூடுமப்பா
 செய்தொழிலும் விர்த்தியாகி சுகமடைவீர்
தப்பாது இந்தவீட்டின் பலன்தானப்பா
 தனபாக்கிய மெத்தவுண்டு உனக்கே யின்று.

வசனம்:—நீர் இப்போது பொருளைத் தேடப்போக மனமிட்டாய் சந்தோஷமாய் கிடைக்கும் மக்கள் பாக்கியம் அதிகரிக்கும் யெவரும் விரோதமில்லை யெடுத்தக்காரியம் கைக்கூடும் வியாபாரம் விர்த்தியாகும் இந்தப் பலன் தப்பாது இது உத்தமம்.

## எண்பத்தி ஆருவது வீட்டின் பலன்

### 86-வது பாட்டு

பாபமது உனைவிட்டு துலைந்துதப்பா
 பார்க்கவும் பந்துவுக்கு ஆகாகாரியம்
தாபமுடன் நீசெய்தாய் இன்றுதானே
 தனிமையுடன் அத்தொழிலை விடுவாயாகில்
ஆபதைகள் வொன்றுமில்லை யுனக்கேயப்பா
 அவனியிலே நல்லசெய்தி நீதான்கேழ்ப்பாய்
கோபமது உனக்குவேண்டாம் குருகடாக்ஷம்
 கொப்பெனவே வுண்டாகி சுகமடைவீர்.

வசனம்:—நீ செய்த பாபமது துலைந்து விட்டது ஆனால் பந்துக்களோடு ஆகாத விரோதமடைந்தாய் அந்தத் தொழிலை விட்டுவிடும் அதனால் ஆபாத மொன்றுமில்லை நீ நல்ல செய்தி கேழ்ப்பாய் கோபத்தால் கெடுதி சம்பவிக்கும் இன்னம் சிலதினத்தில் சுகமடைவீர் இது உத்தமம்.

## எண்பத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 87-வது பாட்டு

சித்தத்தில் நினைத்தகாரியம் பலியாதப்பா
 சீருடனே யென்செய்தி நீதான்கேளு

உத்தமனே நீமுந்தி பாபம்செய்தாய்
உனைவிட்டு போகவில்லை நீதானப்பா
யெத்திசையும் போனபோதில் விரோதமுண்டு
யேனப்பா இராகுகேது பகைதானின்று
பத்தியுடன் பெந்தபூசை செய்தப்போதில்
பலியாது வியாபாரம் நஷ்டமாகும்

வசனம்:—நீ இப்போது நினைத்தக்காரியம் பலியாது நீ முந்தியோர் பாபம் செய்திருக்கின்றாய் அப்பாபம் உன்னைவிட்டு தொலையவில்லை யெங்கு போனபோதிலும் விரோதமுண்டு யெத்தேவதை பூசைசெய்த போதிலும் சுகம் கிடையாது வியாபாரத்தில் நஷ்டமாகும் இது மத்திபம்.

## எண்பத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 88-வது பாட்டு

இனிமையுடன் இந்தவீட்டின் பலனைக்கேளீர்
இன்பமுடன் சொல்லுகிறே னுனுமிப்போ
தனிமையுடன் பொருள்வந்து சேருமப்பா
தானினைந்த காரியமெல்லாம் கூடுமப்பா
பனிபோல பாபமெல்லாம் தீருமப்பா
பலவிரோதி வுனைக்கண்டால் நேசமாவார்
நனிமையுடன் மாதுவொன்று வந்தேசேரும்
நாள்தோறும் வியாபார மதிகரிக்கும்.

வசனம்:—இப்போது நீ தொட்ட வீட்டின்பலன் யேதென்றால் யெந்தக் காரியம் செய்ய விருக்கின்றீரோ அது விர்த்தியடையும் பொருள் வந்துசேரும் உனது பாபமெல்லாம் தீர்ந்து சுகமடைவாய் விரோதிகள் சமாதான மடைவார் நூதனமாக ஓர் மாதுவந்து சேர்வாள் தினம் வியா பாரமதிகரிக்கும் இது உத்தமம்.

## எண்பத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 89-வது பாட்டு

அழிந்திட்டப் பொருளுனக்கு வந்தேசேரும்
அவனிதனிலே குருகடாக்ஷ முனக்கேவுண்டு
பழியொன்று மில்லையடா வியாஜ்யம்தீரும்
பண்மையுடன் விரோதமில்லை யெங்குந்தானே
பொழிந்ததொரு மாதாலே பலன்தான்வுண்டு
போகும் கார்யம் பலிதமாகும் உந்தனுக்கு

தழிப்புடனே கலியாணம் கூடுமப்பா
தன்மனையில் விரோதமன்றி வாழ்ந்திருப்பாய்.

வசனம்:—நீ இந்த வீட்டைத் தொட்டதால் பொருள் வந்துசேரும் குருகடாக்ஷம் அதிகரிக்கும் வியாஜ்யம் தீரும் யெங்கும் விரோதமில்லை ஓர் மாதால் வேண்டிய பொருளுதவியாகும் கலியாணம்கூடும் உனது வீட்டில் மனஸ்தாபம் தீர்ந்து சுகமடைவீர் இது உத்தமம்.

## தொண்ணூறாவது வீட்டின் பலன்

### 90-வது பாட்டு

ஆகாது வுந்தனுக்கு இந்த வீடப்பா
ஆனபொருள் நஷ்டமாகி துன்பம்விளையும்
போகமாய் மாதாலே விரோதமாகும்
பொல்லாப்பு அதிகமாகி நிற்பாய்நீதான்
சேகரிக்கும் கார்யமெல்லாம் கைக்கூடாதப்பா
சேர்ந்ததொரு தோழருனை மதிக்கமாட்டார்
நிகரில்லா வேந்தர்பயம் உனக்கேயாகும்
நீனினைந்த காரியமெல்லாம் வியர்த்தமாகும்.

வசனம்:—இந்த வீட்டின் பலன் யேதென்றால் பொருள் நஷ்டமாகும் மனவியாகூலமடைவாய் கொண்டமாதால் விரோதமாகும் பொல்லாப்பு விளையும் யெத்தனித்த காரியம் கூடாது சொந்த மனிதரும் தோழரும் விரோதமாவார் வேந்தர்பய மதிகமாகும் இது ஆகாது மத்திபம்.

## தொண்ணூத்தி ஓராவது வீட்டின் பலன்

### 91-வதுபாட்டு

ஏனப்பா வுந்தனுக்கு யெந்தகாரியம்
இயல்புடனே கைக்கூடி நிற்குமப்பா
நாணமுடன் பொருள்வந்து சேருமப்பா
நலமுடனே அமைந்தவியாதி தீருமப்பா
வானவர்கள் வுந்தனுக்கு விரோதமில்லை
வாழ்மாது வீடுவந்து சேர்வாளப்பா
பானமுடன் இந்தவீடு பலன்தான்மெத்த
பாலகனே துயரமது விடுவாயிப்போ.

வசனம்:—நீர் யெந்த காரியம் செய்தபோதிலும் நன்மையாகும் கைச் சேர்ந்த பொருள் வந்து சேரும் வியாதிதீரும் வாழ்மாது வீடுவந்து சேர்வாள் இந்த வீட்டின் பலன் மிகுந்த நலம் இது சுபம்.

## தொண்ணூத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 92-வது பாட்டு

அய்யனே துயரமதுக் கொள்ளாதப்பா
ஆக்ஷியுட அருளுனக்கு மெத்தவுண்டு
துய்யனே யெடுத்தவியாஜ்பம் திருமப்பா
துரைகளுடைய சேவையது உனக்கேயாகும்
பய்யமுடன் தனிபொருளும் வந்துசேரும்
பயமில்லை வுந்தனுக்கு யெங்குசென்றால்
நயமுடனே மாதாலுனக்கு லாபமுண்டு
நம்பிநீயும் நில்லடா இப்போதானே.

வசனம்:—நீ இப்போ துயரம்விட்டு விடுவீர் ஆக்ஷியுடைய அருளுனக்கு மெத்தவுண்டு நீ செய்யப்போகின்ற வியாஜ்யம் ஜெயமாகும் தனியாகப் பொருள் வந்து சேரும் நீ யெங்கு சென்றாலும் பயமில்லை ஓர் மாதால் உனக்கு லாபமுண்டு இதை நம்பி நில்லும் சுபம்.

## தொண்ணூத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 93-வது பாட்டு

கஷ்டமெல்லாம் தீருமப்பா வுந்தனுக்கு
கடவுளுடைய அருளுனக்கு மெத்தவுண்டு
நஷ்டமடைந்த வியாபாரமது விர்த்தியாகும்
நால்வருக்கு நல்லவனென்று பேரும்கிட்டும்
இஷ்டமுடன் நினைந்தமாது வந்தேசேர்வாள்
இசைந்துமே நேசருட செய்திகேழ்ப்பீர்
அஷ்டலக்ஷ்மி உன்னிடத்தில் குடியிருப்பாள்
அப்பனே இதுவுண்மை யென்றுநம்பு.

வசனம்:—இப்போது நீ கோரிய காரியம் தீர்ந்து உன் கஷ்டம் துலையும் தெய்வ மருளுண்டு நஷ்டமடைந்த வியாஜ்யம் கைகூடி நிற்கும் நினைந்த மாதே உனக்கு லபிக்கும் துலைதூரத்திலிருந்து நேசடருயை செய்தி கேழ்ப்பீர் இது உத்தமம்.

## தொண்ணூத்தி நான்காவது வீட்டின் பலன்

### 94-வது பாட்டு

அடுத்தவொரு வீட்டினாலே கலகமுண்டு
ஐஸ்வரியம் தொலைந்துநீ பரதேசியாவாய்

கெடுமதியோர் மொழிகேட்டு கெட்டு நிற்பாய்
கிட்டாத கைவிலங்கு கிட்டுமப்பா
படுபாவி யென்றுநீதான் பேரெடுப்பாயின்று
பார்தனிலே மாதாலே கலகமுண்டு
இடுமையெல்லாம் வந்தேசேரு முந்தனுக்கு
இந்தவீட்டின் பலனுனக்கு வேண்டாமப்பா.

வசனம்:—நீ இப்போ தொட்ட வீட்டின் பலனுவது யேதென்றால் அடுத்த வீட்டில் கலகமுண்டு பொருள் சேதமாக்கிவிட்டு நீ பரதேசியாகுவீர் கெட்டமொழிகளை கேட்டு கெட்டுப் போகுவீர் கைவிலங்கு கிட்டும் மாதாலே கலகமுண்டு இடுமை யெல்லாம் ஒன்றாய்க்கட்டி உன்னை சுற்றும் இந்தப் பலன் வேண்டாம் இது மத்திபம்.

## தொண்ணூத்தி ஐந்தாவதுவீட்டின் பலன்

### 95-வது பாட்டு

எண்ணாத யெண்ணமெல்லாம் யெண்ணிவந்தீர்
யேனப்பா இந்தவீடு கெட்டதாச்சே
கண்ணாலே பார்த்தபடி உனக்கேதுன்பம்
கன்னியாலே வந்தடையும் கனத்தமுப்பு
பண்ணாத பாவங்கள் செய்தாய்நீதான்
பலபொருளும் சேதமாகும் வியாபாரம் தன்னின்
குண்ணிடவும் மனமிடுவாய் இதுவேவுண்மை
குருநாதன் கடாக்ஷமது உனக்கேஇல்லை.

வசனம்:—உனக்கு குருநாதன் கடாக்ஷமது கிடையாது வியாபார விஷயத்தில் நஷ்டமாகும் பொருள்போகும் கன்னியாலே கெடுதி சம்பவிக்கும் முன் ஜென்மத்தில் பாபம் செய்திருக்கின்றாய் ஆனபடியால் இந்த வீடு கெட்டது மத்திபம்.

## தொண்ணூத்தி ஆறுவது வீட்டின் பலன்

### 96-வது பாட்டு

சனியனுட பலமுனக்கு மெத்தவுண்டு
சங்கடங்கள் தீருமப்பா உந்தனுக்கு
பனிபோல துன்பமெல்லாம் தொலையுமப்பா
பண்புள்ள பொருள்வந்து சேருமப்பா
தனியாக மாதாலே லாபமுண்டு
தாரணியில் விரோதியர்கள் யாருமில்லை

இனியான குலதெய்வம் அருளேவுண்டு
இதுநல்ல வீடப்பா வுந்தனுக்கு.

வசனம்:—உனக்கு சனியன் விரோதமில்லை சங்கடம் தீரும் பொருள் வந்து சேரும் மாதாலே லாபமுண்டு விரோதியர்கள் ஆருமில்லை உனது குலதேவதை அருள் மெத்தவுண்டு இது உத்தமம்.

## தொண்ணூத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 97-வது பாட்டு

பகையொன்று உமக்கில்லை வியாஜ்யம்தன்னில்
பக்ஷமுடன் கலியாணம் கூடுமப்பா
அகமதன்னில் சந்தோஷம் நீயடைவாய்
ஆனதொரு கைப்பொருளும் வந்தேசேரும்
சுகமுடனே வியாபாரம் விர்த்தியாகும்
செப்பரிய துன்பமெல்லா மொழிந்துநிற்கும்
தகமையொன்று மில்லையடா சென்றவிடம்
தனிகார்யம் கூடிநிற்கும் இதுதான் உண்மை.

வசனம்:—நீ யெடுத்த வியாஜ்யத்தில் பகையேதும் கிடையாது வியாஜ்யம் கைக்கூடும் நீர் சந்தோஷமடைவீர் கலியாணம் கூடிய சீக்கிரத்தில் முடியும் கைப்பொருளும் சேரும் வியாபார மதிகரிக்கும் நீ செல்லும் காரியம் கூடி நிற்கும் இது உத்தமம்.

## தொண்ணூத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 98-வது பாட்டு

பாரடா யெடுத்தக்காரியம் கெட்டுப்போகும்
பக்ஷமுடன் குருகடாக்ஷ முமக்கேயில்லை
கூரடா யெதிராளி சந்தோஷமடைவார்
கூட்டுத்தொழில் உந்தனுக்கு பலியாதப்பா
ஆரடா உன்பங்கில் இருக்கின்றார்கள்
ஆனதொருமாது உம்மைவிட்டு நிற்பாள்
சேரவே பந்துக்கள் விரோதமாவார்
செப்பொண்ணா துன்பமது உனக்கேசேரும்.

வசனம்:—உனக்கு பந்துக்கள் விரோதியாவார் துன்ப மதிகரிக்கும் கூட்டு வியாபாரம் விரோதமாகும் மாது உன்னைவிட்டுப் பிரிவாள் நீ யெடுத்த காரியம் கெட்டுப்போகும் இந்த பலன் வேண்டாம் மத்திபம்.

## தொண்ணூற்றி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 99-வது பாட்டு

அப்பனே உந்தனுக்கு குருகடாக்ஷம்
ஆனதொரு தெய்வபலன் உனக்கேவுண்டு
செப்பரிய பொருள்வந்து சேருமப்பா
செல்வதியும் உன்மனையில் வந்தேவாழ்வாள்
ஒப்பரிய இடுக்கமெல்லாம் தீருமப்பா
உலகத்தில் உன்னைப்போல கியாதியில்லை
கப்பியதோர் வியாபார மதிகமாகும்
கனவருத்தம் தீருமப்பா உந்தனுக்கு.

வசனம்:—உந்தனுக்கு குருகடாக்ஷமும் தெய்வபலித மிருப்பதால் பொருள்வந்து சேரும் விரோதமடைந்தவரும் வீடுவந்து சேர்ந்து சுகமடைவீர் இடுக்கம் நீரும் வியாபாரமதிகரிக்கும் மனவருத்தம் நீரும் இது உத்தமம்.

## நூறுவது வீட்டின் பலன்

### 100-வது பாட்டு

துயரமது விட்டுவின்று நீதான் கேளாய்
சொல்லுகுறேன் உந்தனுக்கு பலன்தன்னை
நயமுடனே சென்றமனிதர் வருவாரப்பா
நாடிவந்த காரியமும் கூடிநிற்கும்
பயமொன்று மில்லையடா வியாஜ்யம் தன்னில்
பக்ஷமுடன் மாதொருத்தி சகாயம்செய்வாள்
அயல்வீட்டுப் பொருள்வந்து சேருமப்பா
அப்பனே மனக்கவலை படையவேண்டாம்.

வசனம்:—நீ துயரம் விட்டு நான் சொல்வதை கேளாய் சென்ற மனிதர் வருவார் நாடி நிற்கும் காரியம் கூடும் வியாஜ்யத்தில் பயமில்லை ஓர் மாதாலே சகாயம் சேரிடும் அயல் வீட்டு பொருள்வந்து சேரும் நீ கவலைப் படவேண்டாம் இது உத்தமம்.

## நூற்றி ஓராவது வீட்டின் பலன்

### 101-வது பாட்டு

இந்தவீடு பலனுனக்கு வேண்டாமப்பா
இதனாலே கெடுதியுண்டு சொல்வேன்காணும்

அந்தமான மாது உம்மை விட்டுநிற்பாள்
ஆராத பெருந்துன்பம் வந்தடையும்
சொந்தமான கைப்பொருளும் சேதமாகும்
சேர்ந்தபந்து விரோதமது மெத்தவுண்டு
பந்தமது செய்யாதே யெந்தகாரியம்
பலியாது வுந்தனுக்கு யென்றுதானே.

வசனம்:—இந்த வீடு உனக்கு ஆகாது மாது உம்மைவிட்டு நிற்பாள் ஆராத பெருந்துன்பம் வந்தடையும் சொந்தமாய் சம்பாதித்த பொருள் சேதமாகும் பந்துக்கள் விரோதமடைவார் நீ யெந்தக்காரியமும் செய்ய உத்தேச மடையாதே இது மத்திபம்.

## நூத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 102-வது பாட்டு

தடையேது மில்லையடா யெந்தகாரியம்
தயவுடனே கைக்கூடி நிற்குமப்பா
படையெடுத்து சென்றாலும் ஜெயங்கொள்வீர்
பண்புடனே சுகமடைந்து இராஜ்யம் பிடிப்பீர்
அடைவான பொருளுனக்கு வந்தேசேரும்
அப்பனே துயரமது விட்டுநிற்பீர்
நடைமாது உன்மனையில் வந்துசேர்வாள்
களித்திடும் வியாதியது தீருமப்பா.

வசனம்:—நீ யெந்தக்காரியம் செய்தப்போதிலும் கைக்கூடும் படை யெடுத்து சென்றால் இராஜ்யம் பிடிப்பீர் பொருள் வந்து சேரும் விரோத மடைந்த மாதும் வந்துசேர்வாள் நீ துயரப்படாதே இது உத்தமம்.

## நூத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 103-வது பாட்டு

தடையேது மில்லையடா வுந்தனுக்கிப்போ
தனிபொருளும் வந்துசேரும் பாக்கியம்தானும்
அடவுடனே பெருவாயடா மாதால்நீயும்
அப்பனே துயரமது வொன்றுமில்லை.
திடமுடனே தேடும்காரியம் பலிக்குமப்பா
தேடரியா நேசர்சேவை நீயேயடைவாய்
புடமிதனில் உன்னைப்போல பாக்கியசாலி
பேசினாலும் கிடையாது இப்போதப்பா.

வசனம்:—நீ இப்போ யெண்ணமிட்ட காரியம் கைகூடி நேசர்சேவை யடைவாய் பொருள் லாபம்கிட்டும் ஆதலால் லாபமடைவீர் இது உத்தமம்.

## நாத்தி நான்காவது வீட்டின் பலன்

### 104-வது பாட்டு

இராகுகேது வுந்தனுக்கு விரோதியப்பா
  இராஜாவான சனியனும் பகையாய்நின்றான்
பாராத குற்றமெல்லாம் உன்னைச்சேரும்
  பண்புடனே மாதாலே துன்பம்நேரும்
வாராத பொருளுனக்கு வந்தாலிப்போ
  வாழாது வுன்னிடத்தில் வகைமோசமாவீர்
கோரிய மாதவுன்னை வெறுத்துநிற்பாள்
  கொப்பனவே இந்தக்குறி வேண்டாமப்பா.

வசனம்:—உனக்கு இராகு கேது சனியும் விரோதமானபடியால் நேரிடாத குற்றமெல்லாம் நேரிடும் ஆதலால் துன்பம் வரும் பொருள் நஷ்டமாகும் கொண்டமனைவி வெறுத்து நிற்பாள் இது பொல்லாங்கு மத்திபம்.

## நாத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 105-வது பாட்டு

அஞ்சாதே நீயுமப்பா யடைவாய்லாபம்
  அன்புடனே குறைவில்லை வுந்தனுக்கிப்போ
வஞ்சமது செய்திட்ட பகையோரெல்லாம்
  வந்துமே தான்பணிந்து சமாதானமாவார்
நெஞ்சமதில் நினைந்திட்டக் காரியம்கூடும்
  நேசனே செய்தொழிலில் லாபமுண்டு
பஞ்சுபோல் பறக்குமடா சூழ்ந்தபாபம்
  பாலகனே வருடத்தில் கைகூடிநிற்கும்.

வசனம்:—இனி உனக்கு யேதும் குறைவில்லை பகையா யிருந்தவ ரெல்லாம் சமாதானமடைந்து பணிவார் நீ நினைத்தக் காரியம் கூடும் செய்தொழிலில் லாபமுண்டு உன்னை சூழ்ந்த பாபமது பஞ்சுபோல் பறக்கும் இதுயெல்லாம் ஒருவருடத்தில் கைக்கூடி நிற்கும் உத்தமம்.

## நாத்தி ஆருவது வீட்டின் பலன்

### 106-வது பாட்டு

தொட்டதொரு வீட்டினுட பலனைச்சொல்வேன்
தோழனே உனது யெண்ணம் முடியுமப்பா
விட்டுபோகும் நவகிரஹத்தின் பூசைசெய்தால்
வெகுநாளாய் பிடித்ததொரு பீடைப்போகும்
பட்டமுடன் பெண்ணொருத்தி நேசமாவாள்
பெருத்தலாபம் உனக்கடையு மிப்போதானே
திட்டமுடன் இன்னாலை நம்பினோர்க்கு
தேடரிய கணேசனருள் உண்டுவுண்டு.

வசனம்:—நீ இப்போது தொட்டவீட்டின் பலனாவது ஜெயமேயாகும் பெருத்த ஆலோசனை யெண்ணமிட்டிருக்கின்றீர் அந்த யெண்ணமாவது ஒரு பெண்பாவையால் முடியும் நீ நவக்கிரஹ பூசை செய்துக்கொண்டு வந்தால் யெந்தக் காரியமும் ஜெயமாகும் இது உத்தமம்.

## நாத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 107-வது பாட்டு

எழுதனில் சனியனுமே இருப்பதாலே
யெடுத்தகாரியம் பலியாது வுந்தனுக்கு
பாழாக அலையச்செய்வான் வுலகர் தன்னில்
பண்புடனே கைப்பொருளும் நஷ்டமாகும்
தாழ்வான மொழியெல்லாம் கேழ்க்கநாடும்
தனிமாது உன்னைவிட்டு வெறுப்பாளப்பா
ஆழாக விரோதமது மெத்தவுண்டு
அப்பனே இந்தக்குறி வேண்டாமிப்போ.

வசனம்:—உனக்கு யேழில் சனி யிருப்பதால் யெடுத்தக்காரியம் பலியாது பலதேசமும் அலையச்செய்யும் கைப்பொருளும் நஷ்டமாகும் தாழ்வான மொழியெல்லாம் கேழ்க்கவைக்கும் மாது உன்னைவிட்டு பிரிவாள் விரோதமது அதிகமாகும் இந்தவீடு உனக்கு வேண்டாம் இது மத்திபம்.

## நாத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 108-வது பாட்டு

சித்தத்தில் யெண்ணமிட்ட காரியம்கூடும்
ஜெயமடைவாய் குடும்பமது விர்த்தியாகி

புத்திரரைப் பெருவாயடா பாக்யெம்சேரும்
பேசிக்கொண்டாய் வெளியூருக்குப் போகநீதான்
உத்தமனே உன்தெய்வப் பூசையாலே
உகந்துநீ கொண்டயெண்ணம் கூடாதப்பா
பத்தியுடன் நாற்பதுநாள் தான் சென்றால்
பலனுண்டு கைக்கூடு மெத்தக்காரியம்.

வசனம்:—நீ நினைத்தகாரியம் ஜெயமாகும், புத்திர பாக்கியம் பெருகும் நீ வெளியூர் போக எண்ணமிட்டாய் அது கைக்கூடாது உன்னுடைய தேவதையை பூஜை செய்கிறாய் இன்னும் நாற்பதுநாள் சென்ற பிறகு உனது காரியம் கைகூடும் இது உத்தமம்.

## நூற்றி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 109-வது பாட்டு

உன்னிதமாய் நீதொட்ட குறியாலப்பா
உத்தமனே பொருள்சேரும் குடும்பவிர்த்தி
தன்னிகரில்லாமல் நீதான் வாழ்வீரப்பா
தரணிதனில் வீட்டுக்காரிய முடியுமின்று
நன்னியதோர் ஜென்மத்தை விட்டுராகு
நன்மையாவான் எட்டுநாளில் வுந்தனுக்கு
பண்ணினதோர் பாபமெல்லாம் தீருமப்பா
பாலகனே இதுவுண்மை யென்றறிவீர்.

வசனம்:—நீ இப்போது தொட்டவீட்டின் பலனாவது மனக்கவலை தீரும் தனலாபம் கிடைக்கும் குடும்ப விர்த்தியாகும் வீட்டுக்காரியம் கூடும் உந்தனுக்கு ஜென்மத்தி லிருந்த ராகுவானவன் யெட்டுதினத்தில் ஒழிகின்றான் இது உத்தமம்.

## நூற்றி பத்தாவது வீட்டின் பலன்

### 110-வது பாட்டு

ஆனதொரு கைப்பொருளும் நஷ்டமாகும்
அப்பனே மனைவிமக்கள் விரோதமாவார்
தானமுடன் வேந்தர்பயம் உனக்கேகிட்டும்
தனிமையுடன் மனக்கவலை நீதான்கொள்வாய்
நாணமன்றி பந்துக்களும் விரோதமாவார்
நலமுடனே மாதாலே துன்பம்சேரும்
மானமில்லா இந்தவீட்டின் பலன்தான்வேண்டாம்

வசனம்:—இதனால் கைப்பொருள் நஷ்டமாகும் மனைவிமக்கள் விரோத மாவார் மனக்கவலை யடைவீர் பந்துக்கள் விரோதமுண்டு ஆகையால் இது மத்திபம்.

## நூத்தி பதினோருவது வீட்டின் பலன்

### 111-வது பாட்டு

தொட்டகுறி தன்னாலே லாபம்கிட்டும்
  துணிவுடனே கைசேர்ந்த பொருள்சேரும்
திட்டமுடன் வெளியூரில் லாபம்கிட்டும்
  நிகரில்லா யெதிராளி உனக்கேவுண்டு
பட்டமுடன் தைர்யமதை விடவும்வேண்டாம்
  பகையாளிதன்னை நீதான் நம்பவேண்டாம்
கட்டமுடன் முன்னுதாக பொருள்நஷ்டமாகும்
  கனிவுடனே பின்னாலே லாபம்கிட்டும்.

வசனம்:—நீ இப்போது தொட்ட வீட்டின் பலனுவ தென்னவென்றால் லாபம் கிடைக்கும் கைசேர்ந்த பொருள் வந்து சேரும் வெளியூரில் லாபம் கிடைக்கும் உனக்கு யெதிரி இருக்கின்றான் அவன் மொழி நம்ப வேண்டாம். நீ தைரியம் விடவேண்டாம் முன்னுதாகவே ஒரு பொருள் நஷ்டமாகும் அதனால் திகிலடையவேண்டாம் பின்னால் லாபம் கிடைக்கும் இது உத்தமம்.

## நூத்தி பனிரெண்டாவது வீட்டின் பலன்

### 112-வது பாட்டு

அப்பனே வொருவருட மாகவேதான்
  ஆவதிகள் பட்டுநீதான் அடங்கிநின்றாய்
செப்பவே இன்றுமுதல் யேழுநாள்சென்றால்
  சுகமுடனே இருவருடம் சுகித்துவாழ்வாய்
ஒப்பரிய பொருளுனக்கு சேருமப்பா
  உலகமதில் செய்தொழிலை விட்டுநின்றாய்
கப்பியதோர் அத்தொழிலை செய்வாயாகில்
  கனவருத்தம் நீங்குமடா புவியில்தானே.

வசனம்:—நீ அதிகமாய் ஒரு வருடம் கஷ்டமடைந்தாய் இப்போது அது நீங்கிவிட்டது இனி இதுமுதற்கொண்டு இரண்டு வருடம் வரைக்கும் யேதும் கஷ்டம்வராது இந்நாள்முதல் எட்டுநாள்தொலைந்தால் சந்தோஷ மடைவீர் பொருள் சேரும் நீர் முன் செய்த தொழிலை விட்டுவிட்டீர் அதை மறுபடியும் செய்தால் லாபம் உத்தமம்.

## நூத்தி பதின்மூன்ருவது வீட்டின் பலன்

### 113-வது பாட்டு

தப்பாது உன்தனுக்கு சனிபகைதான்
தனிமையுடன் ராகுகேது விரோதமுண்டு
செப்பரிய குருபலன்தான் உனக்கேயில்லை
செகமதனில் கைப்பொருளும் நஷ்டமாகும்
இப்பவே கொண்டமாது விரோதமடைவாள்
இணையில்லா பொருளுனக்கு உண்டாய்நிற்கும்
அப்பனே இந்தகுறி வேண்டாமப்பா
ஆனதொரு குலதெய்வம் விரோதமாமே.

வசனம்:—உனக்கு குலதெய்வமும் விரோதம் குருபலன் கிடையாது சனி ராகுகேது விரோதமுண்டு அதனல் கைப்பொருள் நஷ்டமாகும் கொண்டமனைவி மனவியாகூல மடைவாள் ஆகையால் இந்த வீட்டின் பலன் உனக்கு வேண்டாம் இது மத்திபம்.

## நூத்தி பதினன்காவது வீட்டின் பலன்

### 114-வது பாட்டு

பலிக்குமடா இந்தவீடு வுந்தனுக்கு
பாலகனே துயரமது கொள்ளாதப்பா
அலியொன்று இல்லையடா கைப்பொருளும்சேரும்
ஆனதொரு காரியமது கூடிநிற்கும்
நலியான நிரோகமது சவுக்கியமாகுமிப்போ
நாடிநின்ற காரியமது ஜெயமேயாகும்
மலியாதே வுந்தனுக்கு குருகடாக்ஷம்
மைந்தனே மெத்தவுண்டு துயரம்விடும்.

வசனம்:—நீ இந்த வீட்டை யெண்ணமிட்டாய் ஆகையால் குரு கடாக்ஷமிருப்பதால் துயர மடையாதே கைப்பொருளும் சேரும் காரியம் கூடும் நீ யெண்ணமிட்டக் காரியமும் ஜெபமாகும் நீ வியாதியால் துன்ப மடைந்தாய் அந்தப்பிணி தீரும் இது உத்தமம்.

## நூத்தி பதினைந்தாவது வீட்டின் பலன்

### 115-வது பாட்டு

அப்பனே உன்மனதில் கலக்கம்வேண்டாம்
அருள்கணேசன் கடாக்ஷமது உனக்கேவுண்டு

செப்பவே உபகாரம்செய்ய நீதான்
சித்தமதில் யெண்ணமிட்டா யதனையிப்போ
தப்பாமல் யோசித்து செய்வாயிப்போ
தனிமையுடன் நன்மையாகும் வுந்தனுக்கு
கப்பியதோர் பொருள்சேரும் கஷ்டம்தீரும்
கனவருத்த மடையாதே இப்போநீதான்.

வசனம்:—நீ செய்ய வுத்தேசித்த வேலை முடியும் கலக்கம் வேண்டாம் கணேசர் அருளுண்டு நீ உபகாரம் செய்ய யெண்ணமிட்டாய் அது யோசித்து செய்யவும் பொருள் வந்து சேரும் கஷ்டம் தொலைந்திடும் இது உத்தமம்.

## நூற்றி பதினாருவது வீட்டின் பலன்

### 116-வது பாட்டு

பாலகனு மும்மைவிட்டு போனானென்று
பார்த்திட்டீர் இந்த வீடதனைநீதான்
கோலமுடன் சனியனிட செயலாலின்று
கொடுந்தூரம் போய்விட்டான் வரவேமாட்டான்
சீலமுடன் பொருளுமெத்த நஷ்டமாச்சு
செப்பொண்ணா பாபமது நீதான்செய்தாய்
நீலமதில் யெடுத்தக்காரியம் கூடாதப்பா
நெஞ்சமதில் இந்தவீட்டின் பலன்தான்வேண்டாம்.

வசனம்:—நீ இப்போது உனது வயிற்றில் பிறந்த பாலகன் வெளி சென்றவன் வருவானா வரமாட்டானா யென்று யெண்ண மடைந்து தொட்டீர் அவன் சனியனுட செயலால் நெடுந்தூரம் போய்விட்டான் வரமாட்டான் உனக்கு பொருளும் நஷ்டமாகும் நீயோ யதிகபாபம் செய்திருக்கின்றாய் யெந்தக் காரியம் செய்ய உத்தேசமடைந்தாலும் அது முடியாது இது மத்திபம்.

## நூற்றி பதினேழாவது வீட்டின் பலன்

### 117-வது பாட்டு

தொட்டதொரு குறியதனைச் சொல்வேன்கேளாய்
சுந்திரமாய் கைப்பொருளும் வந்தேசேரும்
இட்டமுடன் துன்பமது தீருமப்பா
இச்சையுடனெடுத்தக்காரியம் கூடுமின்று

சட்டமுடன் விரோதியரை வென்றுமிற்பீர்
சாந்தமுடன் வேந்தர்சேவை யடைவீரப்பா
நட்டமில்லை வேளாண்மை விர்த்தியாகும்
நம்படா இந்தவீடு நன்மைதானே.

வசனம்:—நீ இப்போது தொட்டக் குறியானது கைப்பொருளும் வந்து சேரும் யெடுத்தக் காரியம் பலிதமாகும் விரோதியரை வெல்லுவீர் வேந்தர்சேவை யடைவீர் வேளாண்மை யதிகரிக்கும் இது உத்தமம்.

## நூத்தி பதினெட்டாவது வீட்டின் பலன்

### 118-வது பாட்டு

அப்பனே நீதொட்ட வீட்டின்செய்தி
அன்புடன் சொல்கிறேன் நீதான்கேளு
செப்பவே வெளியூரின் செய்திகேழ்க்க
சித்தமதில் விசனமது நீயடைந்தாய்
தப்பாமல் நேசன்தன்னை பிரிந்ததாலே
தனிமையுடன் மனக்கவலை நீயடைந்தாய்
ஒப்பிநீயு முன்னோசனை பிரியாயாகில்
உத்தமனே வுந்தனுக்கு நன்மைதானே.

வசனம்:—நீ இப்போ தொட்டவீட்டில் பலன் யேதென்றால் நீ வெளியூரின் செய்தி கேழ்க்கவும் மனக்கவலை யடைந்தாய் இதல்லாமல் நேசனை பிரிந்ததால் குரோதமடைந்தாய் ஆகையால் இத்த நேசனை பிரிந்ததால் நீ சுகமடைவாய் இது உத்தமம்.

## நூத்தி பத்தொன்பதாவது வீட்டின் பலன்

### 119-வது பாட்டு.

இன்பமுடன் நீனினைந்த காரியமது
இனிவுடனே கைக்கூடி நிற்காதப்பா
தென்புடனே தொடுத்தவியாஜ்யம் தீராதின்று
தொல்லுலகில கொடுத்தகடன் வாராதின்று
அன்புடனே வேளாண்மை பலியாதப்பா
அரசனுட ஆக்கினைக்கி யடங்கிருப்பீர்
வண்மையுடன் சொல்லிவிட்டேன் விந்தபலன்
வையகத்தில் பலியாது யெந்தக்காரியம்.

வசனம்:—நீ இப்போ செய்ய உத்தேசமடைந்த காரியம் கூடாது யெடுத்த வியாஜ்யம் நிறைவேராது கொடுத்தகடன் வொருபோதும்

வாராது வேளாண்மை பலியாது அரசனுட ஆக்கினைக்கு உட்படுவீர் இந்த வீடு ஆகாது மத்திபம்.

## நூத்தி இருபதாவது வீட்டின் பலன்

### 120-வது பாட்டு

கலியாண மில்லையென்று விசனத்தாலே
   கடுகவே இந்தவீட்டைத் தொட்டீரின்று
சலியாமல் குடும்பந்தன்னில் ஒருவனாலே
   சஞ்சலமும் குரோதமது யதிகமாச்சு
பலிக்காமல் செய்யும்படி யெண்ணமிட்டான்
   பாவிதனை வெறுத்துநின்றால் கூடிநிற்கும்
அலியொன்று இல்லையடா பிறகுதானே
   அன்புடனே கலியாணம் கூடுமப்பா.

வசனம்:—நீ இப்போ கலியாணம் முடியவில்லை யென்று மனக்கவலை யடைந்து இந்தவீட்டைத் தொட்டீர் ஆனபடியால் உன் குடும்பத்தில் ஒருப் பகையாளி இருக்கின்றான் அவன் முடிக்காமல் கெடுத்துக்கொண்டு வருகின்றான் அன்னவனை வெறுத்தால் உன் கலியாணம் கூடி சுகப்படுவீர் உத்தமம்.

## நூத்தி இருபத்தி ஒருவது வீட்டின் பலன்

### 121-வது பாட்டு

தெய்வமது உன்பங்கில் இருப்பதாலே
   தேடிநீ கேட்டப்பொருள் கிடைக்குமப்பா
வையகத்தில் புத்திரபாக்கிய மதிகரிக்கும்
   வாழ்ந்திடுவாய் தரித்திரமது நீங்கிஇப்போ
செய்யவே மனஸ்தாபம் தீருமிப்போ
   செல்வனே யெடுத்தகாரிய முடியுமின்று
அய்யனே துயரமது விட்டுநிற்பாய்
   அன்புடனே கைக்கூடு மெந்தகாரியம்.

வசனம்:—உனக்கு தெய்வசகாயமிருப்பதால் கேட்டபொருள் கிடைக்கும் தரித்திரமது தீர்ந்து சுகமடைவீர் மனஸ்தாபம்தீரும் யெடுத்தகாரியம் முடியும் நீதுயரம் விட்டுவிடு யெந்தகாரியத்திற்கு சென்றாலும் ஜெயமடைவீர் இது உத்தமம்.

## நூத்தி இருபத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 122-வது பாட்டு

எடுத்ததோர் காரியமது கூடாதப்பா
எண்ணமிட்ட பொருள் கைசேராதப்பா
அடுத்தவன் இழிவாகச் சொல்வானப்பா
ஆசித்த மாதுனக்கு கிட்டாதப்பா
தடுத்துநீ செய்யும்காரியம் பலிபாதப்பா
தாரணியிற் விரோதமது மெத்தவுண்டு
தொடுவழக்கே வந்துனக்கு சூழுமப்பா
தொந்திரவு நீமெத்த படுவாயப்பா.

வசனம்:—இப்போது நீ யெடுத்த காரியம் கைக்கூடாது அப்படிக்கு கூடினாலும் பலியாது அடுத்தவன் இழிவான மொழிக் கூறுவான் ஆசித்த மாது கிட்டாது உனக்கு பூமியில் விரோதியர் அதிகமுண்டு தொடு வழக்கு அதிகமாய் வந்து சூழும் இந்த வீட்டின் பலன் உனக்கு மத்திபம்.

## நூத்தி இருபத்தி மூன்றுவது வீட்டின் பலன்

### 123-வது பாட்டு

அப்பனே உன்னுடைய பீடையெல்லாம்
அகன்றுமே நவக்கிரஹம் நல்லதாச்சு
செப்பவே ஒருவனை நம்பிஇன்று
செய்கிறாய் காரியமது இன்னம்கேளும்
ஒப்பவே யவன்மனதில கெட்டயெண்ணம்
உறுதியா யெண்ணிவிட்டான் அவனைவிட்டால்
கப்பிவநீ செய்யும் காரியமிப்போதப்பா
கனிவுடனே கைக்கூடி நிற்குமிப்பா.

வசனம்:—உனக்கு பிடித்த பீடைத் தொலைந்து நவக்கிரஹங்களும் நல்லவராய் இருக்கின்றார் நீ செய்ய உத்தேசித்த காரியமது ஒருவனை மன தில் யெண்ணமிட்டு இருக்கின்றாய் அவன் கெட்டயெண்ணமிட்டு இருக் கின்றான் அவனை நீக்கினால் உன் காரியம் பலிதமாகும் இது உத்தமம்.

## நூத்தி இருபத்தி நான்காவது வீட்டின் பலன்

### 124-வது பாட்டு

மெய்யுடனே வுந்தனுக்கு குருவின்பலன்
மேன்மையாக யமைந்தது நன்றுதானே

பொய்யல்ல பலபொருளும் வந்தேசேரும்
பெருமையுடன் மனையாட்டி வந்துவாழ்வாள்
கைவொப்பமிட்ட வியாஜ்யம் கூடிவாழும்
கலியாணம் வுந்தனுக்கு கனமா முடியும்
வையகத்தி லுன்னைபோல பாக்கியசாலி
வலுமையுள்ள புருடனைநான் கண்டதில்லை.

வசனம்:—இப்போ நீ யெண்ணிவந்தக் காரியம் கூடும் உந்தனுக்கு குரு பலன் உண்டு பொருளும் சேரும் உன் மனையாட்டி வீடு வந்து சேர்வாள் நீ கைவொப்பமிட்ட வியாஜ்யம் ஜெயிக்கும் இது உண்மை உத்தமம்.

## நூத்தி இருபத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 125-வது பாட்டு

பார்த்தனே இந்தவீடு பலன் தானப்பா
பார்தனிலே வுந்தனுக்கு பலிதமில்லை
கார்த்திடவும் தெய்வமில்லை வுந்தனுக்கு
கனிவுடனே சனியன்தான் விரோதிபாச்சே
பூர்த்திட்ட பொருளுனக்கு கிட்டாதப்பா
பொல்லாங்கு யெவ்விதத்தில் வந்தேசேரும்
நேர்ந்திட்ட விரோதிதனை நினைந்துநீதான்
நெஞ்சமதை புண்ணாக்கி நிற்பாயின்று.

வசனம்:—நீர் இந்தவீட்டைத் தொட்டீர் அதனால் கெடுதியுண்டு தெய்வபலன் கிடையாது சனியன் விரோதமாகும் பொருளும் கிடைப்பது அரிது யெங்கு சென்றாலும் பொல்லாங்கு நேரிடும் இதை யெல்லாம் நினைந்து எண்ணமிட வேண்டியது இது மத்திபம்.

## நூத்தி இருபத்தி ஆறாவது வீட்டின் பலன்

### 126-வது பாட்டு

பயப்பட வேண்டாமின்று சொல்லக்கேளும்
பண்புடனே நிம்மதியில் பித்தவாய்வு
நயமுடனே உன்மனதில் விசனமொன்று
நாட்டிநீ இருக்கின்றாய் நின்னம்கேளு
தயவுடனே சிவபூசை செய்துவந்தால்
தாரணியில் பொருள்சேரும் அன்பம்துலையும்
மயமானபின்னால் சுகம் மெத்தவுண்டு
மைந்தனே இந்தவீடு நல்லதப்பா.

வசனம்:—நீ யேதுக்கும் பயப்படவேண்டாம் உன் திரேகமதில் பித்த வாய்வு அதிகரித்திருக்கிறது மனதில் விசனமொன் றடைந்தாய் ஆகை யால் நீ சிவபூஜை செய்வாயாகில் இது யெல்லாம் தீர்ந்து பின்னால் பொருள் சேர்ந்து சுகமடைவாய் இது உத்தமம்.

## நூத்தி இருபத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 127-வது பாட்டு

தென்மேற்கு திசையிலிருந்து உந்தனுக்கு
தேடியே பொருள்வந்து சேருமப்பா
அன்புடனே நினைத்தகாரியம் ஜெயமேயாகும்
அலச்சலு மொன்றுமில்லை லாபமுண்டு
அனந்தகோடி பகையோர்கள் உன்னைக்கண்டால்
யேதொன்றும் பேசார்கள் வணங்கிநிற்பார்
வின்னமுடன் இரண்டுமாதம் தனிலேதானே
உந்தனுக்கு கைகூடும் நம்பிநில்லும்.

வசனம்:—நீ இப்போ யெண்ணமிட்டதால் உனக்கு தென் மேற்கு திசையிலிருந்து பொருள் வந்து சேரும் நினைத்தகாரியம் கைகூடும் துன் பம் தொலையும் பகையோர்கள் உன்னைக்கண்டால் சமாதானமடைவார் இது யெல்லாம் இன்னம் இரண்டு மாதத்தில் பூர்த்தியாகும் உத்தமம்.

## நூத்தி இருபத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 128-வது பாட்டு

கேது செவ்வா யுந்தனுக்கு விரோதமப்பா
கேட்டபொருள் கைக்கூடி வாரா திப்போ
யேது இனி செய்தபோதில தோஷமுண்டு
யெடுத்தகாரியம் பலியாது பயமேயாகும்
சாதுபோல் நீசென்றாலும் விரோதமாகும்
சார்ந்தபந்து ஜனங்களுமே தூஷிப்பாரே
வாதுவொன்றும் பேசாதே மாதாலதுன்பம்
வந்தடையும் உந்தனுக்கு ஆகாதப்பா.

வசனம்:—கேது செவ்வாய் விரோதமானபடியால் நீ பிறரை கேட்டப்பொருள் கைக்கூடாது யென்ன தர்மம் செய்தபோதிலும் தோஷ முண்டு யெடுத்தகாரியம் பலியாது சாதுபோல் நீ இருந்தாலும் விரோத மதிகரிக்கும் பந்து ஜனங்கள் தூஷிப்பார் ஆதலால் துன்பம் நேரும் இது மத்திபம்.

## நூத்தி இருபத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 129-வது பாட்டு

மனக்கோபமடைந்து கைவிட்ட பொருள்தான்
மைந்தனே உந்தனுக்கு வந்தேசேரும்
கனமுடனே யதிகாரளாய் துன்பப்பட்டாய்
கார்த்திட்டீர் ஓர் தொழிலை நம்பிநீதான்
வனவாசம் போனமனிதர் வந்தேசேர்வார்
வகைமோச மில்லைபடா வுந்தனுக்கிப்போ
தனமான பத்துமாதம் போனபின்பு
தகமையுடன் இதுயெல்லாம் கூடிநிற்கும்.

வசனம்:—மனக்கோபத்தால் கைசோர்ந்த பொருள் வந்தடையும் துன்பம் தீரும் ஓர் தொழிலைப்பற்றி நம்பினீர் வனவாசம் போனமனிதர் வருவார் இது யெல்லாம் ஐந்துமாதம் போனபின்பு முடியும் உத்தமம்.

## நூத்தி முப்பதாவது வீட்டின் பலன்

### 130-வது பாட்டு

எந்தவேலை செய்தாலு முந்தனுக்கிப்போ
இன்பமுடன் கைக்கூடி நிற்குமப்பா
விந்தையான சிநேகிதனை பிரிந்தாய் நீதான்
விமலனே மறுபடியும் கூடிநிற்பான்
அந்தமான மாதாநீல சவுக்கியமுண்டு
ஆனதொரு வியாபாரத்தி லாபம்கிட்டும்
பந்தமது செய்திட்டால் ஜெயமேயாகும்
பார்தனிலே உனைப்போல பாக்கியவானில்லை.

வசனம்:—நீர் யெந்தவேலை செய்தாலும் கைக்கூடி நிற்கும் நீர் ஓர் சிநேகிதனை பிரிந்தீர் அன்னவன் மறுபடியும் கூடி வாழ்வான் வியாபாரத்தில் லாபமடைவீர் நீயென்ன பந்தம் செய்தபோதிலும் ஜெயமடைவீர் இது உத்தமம்.

## நூத்தி முப்பத்தி ஒன்றுவது வீட்டின் பலன்

### 131-வது பாட்டு

குருவினுட கடாக்ஷமது உனக்கேயில்லை
கொப்பெனவே நினைத்தகார்யம் கூடாதப்பா
பெருமையுடன் விரோதமது யதிகமாகும்
[illegible]

அருமையாக தேடும்பொருள் நஷ்டமாகும்
ஆனதொரு மாதாலே விரோதமுண்டு
கருமமது உனைவிட்டு யகலவில்லை
கர்த்தனிட செயலென்று யெண்ணிடுவீர்.

வசனம்:—உனக்கு குருவின் கடாக்ஷம் கிடையாது நீ நினைத்த காரியம் கூடாது விரோதமதிகரிக்கும் வியாபாரத்தில் அலைச்சலுண்டாகும் பொருள் நஷ்டமடையும் கருமம் உனைவிட்டு தொலையவில்லை இது மத்திபம்.

## நூத்தி முப்பத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 132-வதுபாட்டு

நித்தமும் பணத்தின்மேலாசைதானே
நிகழுடன் யெண்ணமிட்டு இருக்கின்றாய்நீ
பத்தியுடன் மாதாலே பொருள்தான் கிட்டும்
பலயெண்ணம் விட்டுவிடு இனிமேல்நீதான்
சித்தமாய பெரியோரால் உதவியாகும்
செப்பொணு வெளியூரில் வேலைகிட்டும்
ஒப்பரிய தப்பில்லை இந்தக்குறிதான்
உத்தமனே உந்தனுக்கு பலிக்குமப்பா.

வசனம்:—உனக்கு பணத்தின்மீது யதிக அபேக்ஷையடைந்திருக்கின்றாய் அது ஓர் மாதால் கிடைக்கும் பெரியமனிதரால் உதவியாகும் வேலையும் வெளியூரில் கிட்டும் இதை நம்பி நின்றால் உத்தமம்.

## நூத்தி முப்பத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 133-வது பாட்டு

ஏனப்பா துயரமது கொண்டாய் நீதான்
இச்சையுடன் நினைந்தகாரியம் கூடுமப்பா
கானமுன்வோர் மாதைநினைத்து நீதான்
கனவருத்தம் படுகின்று யின்னம்கேளீர்
நானமுடன் சிலதினத்தில் கூடுமப்பா
நன்மையுடன் புத்திரபாக்கிய மதிகரிக்கும்
தானமுடன் குலதேவதை பூசைசெய்தால்
தன்மையுடன் கைக்கூடி நிற்குமப்பா.

வசனம்:—நீ யதிசதுயர மடைந்தாய் நீ யெண்ணமிட்டகாரியம் கூடும் வேறொரு மாதை மனதில் நினைந்து துக்கமடைந்தாய் இன்னும் கொஞ்சம் தினத்தில் கூடும் புத்திரலாபம் பெருவீர் ஆனால் உனது தேவதைக்கு பூசைப் போடவும் இது உத்தமம்.

## நூத்தி முப்பத்தி நான்காவது வீட்டின் பலன்

### 134-வது பாட்டு

தொட்டதொரு வீட்டின்பலன் சொல்வேனின்று
சுந்தரனே திட்டமுடன் கேழ்ப்பாய்நீதான்
சட்டமுடன் நினைந்தகாரியம் கூடாதப்பா
சேர்ந்திட்ட கைப்பொருளும் சேதமாகும்
திட்டமுடன் சிநேகிதரால் அபாயம்கூடும்
நெஞ்சமதில் பாதகனை நினைக்கவேண்டாம்
திட்டமுடன் குருபூசை செய்து வந்தால்
தேடியே நாள்தோறும் கூடும் கார்யம்.

வசனம்:—நீ இப்போது தொட்டவீட்டின்பலன் யேதென்றால் நீ நினைந்தகார்யம் கூடாது சேர்ந்திட்டப்பொருளும் வாராது ஓர் சிநேகிதனால் விரோதமுண்டு அவனை நேசிக்கவேண்டாம் குருபூசை செய்துக்கொண்டு வந்தால் உன் காரியம் பிறகு நிறைவேறும் இது மத்திபம்.

## நூத்தி முப்பத்தி ஐந்தாவதுவீட்டின் பலன்

### 135-வது பாட்டு

நவகிரஹத்தின் கோளாருதான் தீர்ந்துதப்பா
நாடிநிற்கும் காரியமது கூடிநிற்குமப்பா
அவனிதனில் குருபலன்தான் உனக்கேயுண்டு
ஆனதொரு கைப்பொருளும் வந்தேசேரும்
புவிமீது தோழனுட நேசப்புரிவீர்
பொல்லாப்பு மொன்றுமில்லை வுந்தனுகப்பா
தவராது இந்தபலன் மாதாலாபம்
தன்மையுடன் கூடிவந்து நிற்பாய்நீதான்

வசனம்:—உனக்கு நவகிரஹத்தின் கோளாருதீர்ந்து விட்டது குரு பலன் மெத்தவுண்டு நீ யெடுத்தகாரியம் கூடும் கைப்பொருள் வந்து சேரும் நேசருடன் நேசமடைவீர் பொல்லாங்கு மொன்றுமில்லை மாதால்லாப முண்டு இது உத்தமம்.

## நூத்தி முப்பத்தி ஆருவது வீட்டின் பலன்

### 136-வது பாட்டு

விட்டுதடா வுந்தனுட கஷ்டமிப்போ
வேண்டிபோகும் வியாபாரம் விர்த்தியாகும்
தொட்டதொருப் பொருளெல்லாம் தங்கமாகும்
தோகையரின் நேசமது மெத்தவுண்டு
இட்டதொரு வேளாண்மை விர்த்தியாகும்
ஈசனுட அருளுனக்கே மெத்தவுண்டு
வெட்டிவிட்ட மனிதரெல்லாம் வந்தே சேர்வார்
விர்த்தியாகும் குடும்பந்தன்னில் புத்திரபாக்கியம்.

வசனம்:—உனக்கு யெல்லாம் தொலைந்துவிட்டது வியாபாரம்விர்த்தியாகும் யெதை தொடுகின்றையோ அதுயெல்லாம் தங்கம்போல் ஜொலிக்கும் தோகைமார் நேசமதிகமுண்டு வேளாண்மை பெருகிவாழ்வீர் வெறுத்துவிட்டமனிதர் வந்து சேர்வார் குடும்பத்தில் புத்திர பாக்கியம் அதிகரிக்கும் கடவுள் கருணையதிகமடைவீர் இது உத்தமம்.

## நூத்தி முப்பத்தி எழாவது வீட்டின் பலன்

### 137-வது பாட்டு

ராகுகேது வுந்தனுக்கு விரோதமப்பா
இராஜ்யமெங்கும் திரிந்தாலும் பகைசாருகும்
ஆகாது வுந்தனுக்கு யெடுத்தகாரியம்
அரசனுட பயமேதான் மெத்தவுண்டு
போகாதே மாதருட பின்னால்நீதான்
இடுக்கமது வந்துசேரும் இப்போதானே
போகுமடா கைப்பொருளும் நஷ்டமாகி
போகுமிட மெங்குமேதான் விரோதமாகும்.

வசனம்:—உனக்கு இராகுகேது விரோதமடைந்திருப்பதால் யெங்கு திரிந்தாலும் பகை வந்து சேரும் யெந்தகாரியமும் பலியாது அரசனுடைய பயமெத்த லபிக்கும் மாதர் பின்பற்றி நடக்காதே அதனால் தோஷமுண்டு கைப்பொருளும் நஷ்டமாகும் விரோத மதிகரிக்கும் இது மத்திமம்.

## நூத்தி முப்பத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 138-வது பாட்டு

மனையது கட்டநீதான் யெண்ணமிட்டாய்
மங்கள மாகவேதான் முடியுமப்பா

உனைபோல யோகசாலி யாருமில்லை
உத்தமனே கைப்பொருளும் வந்துசேரும்
கனமுடன் வியாபாரம் விர்த்தியாகும்
கண்டவர்க்கு விரோதமில்லை உலகமீது
தினமுடன் உந்தன்யெண்ணமுடியுமப்பா
தேடிநீ செய்குவாய் இந்தகார்யம்.

வசனம்:—நீ இப்போது மனை கட்ட வேண்டுமென்று மனமிட்டு இருப்பதாலே அது குருகடாக்ஷத்தினல் முடியும் கைப்பொருள் சேரும் வியாபாரம் விர்த்தியாகும் விரோதமில்லை உந்தன் யெண்ணம் முடியும். இது உர்தமம்.

## நூத்தி முப்பத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 139-வது பாட்டு

பிரர்கையில் சென்றபணம் வருமாயென்று
பேசிதால் தொட்டீர்நீர் இந்தவீட்டை
பரபரப்பாய் பொருள்வந்து சேருமப்பா
பக்ஷமுடன் கணேசருட கிருபைதானுண்டு
மரப்பொன்று மில்லையடா மாதாவுக்கு
மன்னவனே வியாதியது யதிகரிக்கும்
திறமையுடன் உன்னுடைய வீட்டின்தெய்வம்
திகைதப்பி நிற்குதே பூசைசெய்வீர்.

வசனம்:—நீ இப்போது பிறர் கையில் யகப்பட்ட பணம் வருமா யென்று தொட்டீர் ஆனல் அது கணேசர் கடாக்ஷத்தினல் வரும் ஓர் மாதால் வியாதி அடைவீர் உன்னுடைய வீட்டின் தேவதை திகைதப்பி நிற்கின்றது அதற்கு பூஜைபோட்டால் யெல்லாக் காரியமும் முடியும் இது உத்தமம்.

## நூத்தி நாற்பதாவது வீட்டின் பலன்

### 140-வது பாட்டு

அப்பனே உந்தனுக்கு குருகடாக்ஷம்
அன்புடனே இல்லையடா யிப்போதப்பா
தப்பாது அரசனுட விதிக்குநிற்க
தன்யனே கைப்பொருளும் நஷ்டமாகும்
செப்பரிய உலகமதில் விரோதியாவாய்
ஜெயமில்லை யெடுத்தகாரியம் பலியாதப்பா

இப்பவே போகுமிடம் விரோதமாகும்
இந்தபலன் நினையாதே யெப்போதப்பா.

வசனம்:—உனக்கு குருகடாக்ஷம் கொஞ்சமாகிலும் கிடையாது அரசன் பய மதிகரிக்கும் உலகமதில் விரோதமாகுவீர் யெடுத்தகாரியம் பலியாது போகுமிடத்தில் விரோதமாகும் இந்தபலன் வேண்டாம் மத்திபம்.

## நூத்தி நாற்பத்தி ஒருவது வீட்டின் பலன்

### 141-வது பாட்டு

நடையில்லை யெடுத்தகாரிய முடியுமப்பா
தயவுடனே சனியுனக்கு நன்மைதானே
கடைவீதியில் தந்தருடன் வந்தேசேரும்
கன்னியொருத்தி உன்மனையில் வந்துவாழ்வாள்
நிடமுடனே மக்களபாக்கியம் நீதான்பெருவாய்
தேடியதோர் வியாபாரம் விர்த்தியாகும்
படபடப்பாய் சென்றவிடம் விரோதமில்லை
பக்ஷமது நினைந்திட்டார் கடவுள்தானும்.

வசனம்:—உன்மீது கடவுள் கிருபைகூர்ந்தபடியால் சென்றவிடத்தில் விரோதமில்லை வியாபாரம் விர்த்தியாகும் மக்கள்பாக்கியம் பெருவீர் ஓர் மாது உன்மனையில் வந்து வாழ்வாள் யெடுத்த காரியம் ஜெயமாகும் உனக்கு சனியன் நல்லவன் ஆகையால் இது உத்தமம்.

## நூத்தி நாற்பத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 142-வது பாட்டு

கலியாணம் செய்துக்கொள்ள மனமேமிட்டீர்
கருத்துடனே நினைந்தமாது கூடுமப்பா
சலியாமல் பந்துக்கள் விரோதமில்லை
சஞ்சலமும் தீருமப்பா நேசருடைய
அலியாமல் நேசமது பிரியமாட்டீர்
ஆக்ஷியுட அருளுனக்கு மெத்தவுண்டு
நலியாதே உன்மனதில் கலக்கம்வேண்டாம்
நஷ்டமில்லை கைப்பொருளும் கூடுமப்பா.

வசனம்:—கலியாணம் செய்துக்கொள்ள மனமிட்டீர் இதல்லாமல் நினைந்த மாதே உனக்கு லபிக்கும் பந்துக்கள் விரோதமில்லை சஞ்சலம் தீரும் நேசருடன் கூடிவாழ்வீர் நஷ்டமடைந்த பொருள் கைக்கூடும் மனக்

கவலை வேண்டாம் ஆக்ஷியுட அருளுனக்கு மெத்தவுண்டு நீ பயப்பட வேண் டாம் இது உத்தமம்.

## நூத்தி நாற்பத்தி மூன்ருவது வீட்டின் பலன்

### 143-வது பாட்டு

பொல்லாத சனியனுன்னை பிடித்தானப்பா
பொருளெல்லாம் சேதமாகி யலைந்துநின்றீர்
சொல்லாமல் மாதுவும்மை பிரிந்திருப்பாள்
செப்பரிய விரோதமது யதிகமாகும்
கல்லாத மூடரோடு நேசம்புரிவீர்
கனமுடனே அவனாலே ஆனியுண்டு
தள்ளாதே யென்மொழிதான் இப்போபாலா
தப்பாமல் இந்தவீடு ஆகாதப்பா.

வசனம்:—சனியன் உன்னை பிடித்திருக்கின்ருன் தேசம்விட் டலைந்து நிற்பீர் மாது உம்மை பிரிவாள் விரோதமதிகமாகும் ஓர் மூடனேடு நேசமா யிருக்கின்றீர் அவனுல் கேடு சம்பவிக்கும் ஆகையால் இந்தவீ டாகாது இது மத்திபம்.

## நூத்தி நாற்பத்தி நான்காவது வீட்டின் பலன்

### 144-வது பாட்டு

இந்த வீட்டையென்னமிட்டு தொட்டீரப்பா
இன்பமுடன் சொல்லுகுறேன் நீதான்கேளாய்
பந்தமிட்டு தூரதேசம் சென்றமனிதர்
பக்ஷமுடன் வீடுவந்து சேர்வாரப்பா
சொந்தமானக் கைப்பொருளும் வந்தேசேரும்
சுந்திரனே நீயெடுத்த வியாஜ்பம்தீரும்
அந்தமான வேளாண்மை யதிகமாகும்
ஆச்சரியம் உன்தனுக்கு பலன்தான்மெத்த.

வசனம்:—நீ இந்த வீட்டை தொட்டபடியால் நெடுந்தூரம் சென்ற மனிதர் வீடுவந்து சேர்வார் சொந்தமானக் கைப்பொருளும் வந்து சேரும் நீ யெடுத்த வியாஜ்யம் தீரும் வேளாண்மை யதிகரிக்கும் இந்த வீட்டின் பலன் அதிக ஆச்சரியமடைந்தது இது உத்தமம்.

## நூத்தி நாற்பத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 145-வது பாட்டு

கைவிட்டு போனபொருள் கிட்டுமப்பா
  கலக்கமது விட்டுநிற்பாய் இன்றுநீதான்
தாவியுடன் வெண்மையான பொருள்தானின்று
  தயவுடனே போனதப்பா மைச்சோர்ந்துமே
நாவியுடன் பெண்மாது யெடுத்துதானே
  நலமுடனே அடக்கமது செய்துவிட்டாள்
கூவிநீயும் சொல்லாதே வொன்றுமேதான்
  கொப்பனவே இரண்டுநாளில் காண்பாய்நீதான்.

வசனம்:—கைவிட்டு போனப்பொருள் கிட்டுமோ யென்று யெண்ணமிட்டிருக்கிறீர் அந்தப்பொருள் வெண்மையான பூஷணம் அதை ஓர் மாது அடக்கம் செய்திருக்கின்முள் நீ கேழ்க்காமல் இருந்தால் இன்னம் இரண்டுதினத்தில் அகப்படும் இது உத்தமம்.

## நூத்தி நாற்பத்தி ஆருவது வீட்டின் பலன்

### 146-வது பாட்டு

நீயாயாதிபதியாக நீயே சென்றால்
  நால்வருக்கும் கைக்கட்டி நிற்பாய்நீதான்
சேயரும் மனைவிதானும் பிரிந்து நிற்பார்
  செப்பொணு இடுக்கமது வந்தேசூழும்
நேயமுடன் மாதாலே துன்பம்நேரும்
  நினைவுடனே கைப்பொருளும் நஷ்டமாகும்
காயமுடன் கடன்காரன் வந்தேவுன்னை
  கருணையுடன் பிடித்து இம்சைசெய்வானப்பா.

வசனம்:—உனக்கு தெய்வ சகாய மில்லாதப்படியால் நால்வருக்கும் விரோதமாக நிற்பீர் சேயரும் மனைவியும் உம்மை விட்டுப் பிரிவார் இடுக்கமெல்லாம் வந்து நேரிடும் ஓர் மாதாலே உன் தலைக்கு முப்பு சம்பவிக்கும் கைப்பொருள் நஷ்டமாகும் கடன்காரர் வந்து தொந்திரவு செய்வார் இது மத்திபம்.

## நூத்தி நாற்பத்தி எழாவது வீட்டின் பலன்

### 147-வது பாட்டு

நேர்ந்ததொரு துன்பமது தீருமப்பா
  நெஞ்சமதில் நினைந்தகாரியம் முடியுமப்பா

சேர்ந்தவொரு மனிதருமே வருகஇன்று
 சேதிதனை நீகேழ்ப்பாய் ஜெகமதன்னில்
பார்த்தவர்கள் உனைக்கண்டால் பயமேகொள்வார்
 பண்புடனே பொருள்வந்து சேருமப்பா
ஆர்த்திட்ட கணேசனுட கடாக்ஷமது
 அப்பனே உந்தனுக் கிடைக்குமின்று.

வசனம்:—உனக்கு கணேசன் கடாக்ஷமிருப்பதால் துன்பம் தீரும் நினைந்த காரியம் கைக்கூடும் சொந்தமனிதர் வருக செய்தி கேழ்ப்பீர் உன்னை கண்டவர் அதிகபயமடைந்து நிற்பார் பொருள் வந்துசேரும் இது உத்தமம்.

## நூத்தி நாற்பத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 148-வது பாட்டு

தீராத பிணியதுதான் தீருமப்பா
 தேடியதோர் வியாஜ்யமது நன்மையாகும்
பாராத மாதுதன்னை பார்ப்பாய்நீதான்
 பக்ஷமுடன் குருகடாக்ஷ முனக்கேவுண்டு
தீராத குற்றமது தீருமப்பா
 தேசமதில் கவலையது விட்டுநிற்பீர்
கூறாத பிறர்பொருள்தான் வந்தேசேரும்
 கொற்றவனே யெடுத்தகாரிய முடியுமப்பா.

வசனம்:—உனக்கு நேர்ந்த பிணிதீரும் வியாஜ்யம் நன்மையாகும் யென்றும் பார்க்காத மாதை நீ காண்பீர் குற்றமதுதீரும் பிறர்பொருள் உன்கையில் வந்து சேரும் நீ கவலைப்பட வேண்டாம் யெடுத்தகாரியம் முடியும் குருகடாக்ஷமுண்டு ஆகையால் இது உத்தமம்.

## நூத்தி நாற்பத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 149-வது பாட்டு

செய்யாத பாபமது செய்தாய் நீதான்
 ஜெகமதனில் யெடுத்தகாரிய முடியாதப்பா
வையகத்தில் விரோதமது மெத்தவுண்டு
 வாழ்மாது உனைவிட்டு பிரிவாளப்பா
நைய்யுடனே கைப்பொருளும் சேதமாகும்
 நாடிநீ யெடுத்ததொழில் கெட்டுப்போகும்

பையமா இந்தவீடு பலன்தான் வேண்டாம்
பாலகனே சனியனுமே விரோதியாச்சே.

வசன:—உனக்கு சனியன் விரோதமானபடியால் யெடுத்தக்காரியம் முடியாது விரோத மெத்த உண்டு வாழ்மாது விட்டுப்பிரிவாள் கைப் பொருள் சேதமாகும் செய்ய உத்தேசமடைந்த தொழில் கெட்டுப்போகும் இது மத்திபம்.

## நூத்தி ஐம்பதாவது வீட்டின் பலன்

### 150-வது பாட்டு

யெத்திசை சென்றபோதில் உந்தனுக்கு
யெழிலுடன் கியாதிபது யதிகமாகும்
சித்தமதில் வியாபாரம் செய்ய யெண்ணமிட்ட
செல்வமது யதிகமாகி பெருகுமப்பா
நத்திஉன்னை யண்டினவரை கார்ப்பாய்நீதான்
நாதாந்த குருகடாக்ஷமும் உனக்கேவுண்டு
பத்தியுடன் குலதேவதை பூசைசெய்வாய்
பக்ஷமது உன்மீதுவைத்து ஆள்வார்.

வசனம்:—நீ யெங்கு சென்றபோதிலும் உனக்கு கியாதி யதிகமாகும் வியாபாரம் செய்ய மனமிட்டீர் அதனால் லாபமுண்டு உன்னை ஒருவர் நத்திநிற்பார் அவரை காப்பாற்ற முயல்வீர் உனக்கு குருகடாக்ஷ மிருக் கிறது ஆனல் உன் குலதேவதைக்கு பூஜைபோடவும் இது உத்தமம்.

## நூத்தி ஐம்பத்தி ஒருவது வீட்டின் பலன்

### 151-வது பாட்டு

உந்தனை கெடுக்க வெகுஜனங்கள்கூடி
உலகமதில் பேசுரார்கள் கெட்டுப்போவார்
அந்தமாக பொருள்தான் கைவசமேயாகும்
அப்பனே வியாஜ்யமது ஜெயமாய்நிற்கும்
சொந்தமான பூமியது வந்தேசேரும்
சுந்திரனே யெக்காரியம் பலியுமப்பா
விந்தையான மாதொருத்தி வந்துசேர்வாள்
வேண்டியதோர் ஆக்ஷியருள் உனக்கேவுண்டு.

வசனம்:—உன்னை கெடுக்க அநேகபேர்கூடி யேசுரார்கள் ஆனல் அவர்கள் கெட்டுப்போவார் உனக்கு பொருள் வந்து சேரும் வியாஜ்யம் ஜெயமாகும் சொந்தமாய் ஆஸ்தி யுடைவீர் யெக்காரியம் செய்தாலும்

பலியும் உன்னிடத்தில் மாதொருத்தி வந்தடைவாள் உனக்கு வேண்டிய ஆசுழியருள் இருக்கிறது இது உத்தமம்.

## நூத்தி ஐம்பத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 152-வது பாட்டு

எடுத்ததோர் காரியமது பலியாதப்பா
யெண்ணமிட்ட மாதுனக்கு கூடமாட்டாள்
அடுத்ததோர் வீட்டுக்காரன் விரோதியப்பா
அவனாலே கெடுதியது மெத்தவுண்டு
நடுக்கமது கொள்வாயப்பா யரசர்முந்தி
நால்வரும் நகைத்திட நாள்தான்நேரும்
படுப்பாவி சனியனுட செயல்தானிது
பார்க்காதே இந்தவீடு பலன்தானப்பா.

வசனம்:—நீ யெடுத்தக்காரியம் பலியாது யெண்ணமிட்ட மாது கூடாது அடுத்த வீட்டுக்காரன் விரோதி அவனால் கெடுதி யுண்டாகும் அரசர்முன்னில் பயமடைவீர் நால்வர் நகைக்க நாள் நேரிடும் இதற்கெல்லாம் மூலாதாரம் சனியன் யிருப்பதால் இந்த வீடு ஆகாது மத்திபம்.

## நூத்தி ஐம்பத்தி மூன்ருவது வீட்டின் பலன்

### 153-வது பாட்டு

விவாகமது செய்ய நீதான் மனமேயிட்டீர்
வேகமுடன் கூடுமடா இப்போதப்பா
அவனிதனில் நஷ்டமடைந்த பொருள்சேரும்
ஆனதொரு பந்துக்கள் சேர்ந்துவாழ்வார்
பாவமது யேதுநீதான் செய்யவில்லை
பார்த்தவர்கள் நல்லோனென்று பேசுவாரே
தவமது செய்ததாலே பலித்துதப்பா
தப்பாது இந்தவீடு பலனுனக்கு.

வசனம்:—நீ விவாகம் செய்ய மனமிட்டீர் யது தடையன்றி கூடும் நஷ்டமடைந்த பொருள் வந்துசேரும் பந்துக்கள் சமாதான மடைவார் நீ பாவமேதும் செய்யவில்லை பார்த்தவர்கள் நல்லோனென்று பேசுவார்கள் நீ முந்தி தர்மம் செய்தபடியால் இந்தவீடு தப்பாது இது உத்தமம்.

## நூத்தி ஐம்பத்தி நான்காவது வீட்டின் பலன்

### 154-வது பாட்டு

அன்புடனே யென்செய்தி கேளுமப்பா
ஆக்ஷியுட யருளுனக்கு மெத்தவுண்டு
தென்புடனே அண்ணன் தம்பி வொன்ருய்இற்பீர்
தேடியதோர் வியாபாரமது விர்த்தியாகும்
வின்னமா தலைதூரம் சென்றமனிதர்
வீடுவந்து சேர்வாரே துயரம்வேண்டாம்
உண்மையுடன் இந்தபலன் தப்பாதப்பா
உந்தனுட கார்யமெல்லாங் கூடிநிற்கும்.

வசனம்:—உனக்கு ஆக்ஷியுடைய அருள் மெத்த வுண்டு அண்ணன் தம்பி வொன்ருய் இருப்பீர் வியாபாரம் விர்த்தியாகும் தூரம் சென்ற மனிதர் வீடுவந்து சேர்வார் இந்தபலன் தப்பாது உத்தமம்.

## நூத்தி ஐம்பத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 155-வது பாட்டு

ராகுகேது வுந்தனுக்கு விரோதமப்பா
இராஜ்யமதில் ஆனியது மெத்தவுண்டு
பாகுடனே செலவழித்த பொருள்சேராது
பக்ஷமுடன் மொழியாடி வுனைவதைப்பார்
வாகுடனே மாதாலே துன்பம்நேரும்
வந்திட்ட வேளாண்மை பலியாதப்பா
ஆகுவேரும் விநாயகருடைய அருள் தானில்லை
அப்பனே இந்தப்பலன் வேண்டாமப்பா.

வசனம்:—உனக்கு இராகுகேது விரோதமடைந்தமையால் இராஜ்யத்தில் ஆனி சம்பவிக்கும் செலவிட்டபொருள் வாராது நல்ல மொழியாடி வுன்னை வஞ்சிப்பார் வேளாண்மை விர்த்தியாகாது ஆனல் கணேசருடைய கருணை இல்லாதபடியால் இது மத்திமம்.

## நூத்தி ஐம்பத்தி ஆருவது வீட்டின் பலன்

### 156-வது பாட்டு

நீர்தொட்ட வீட்டின்பலன் சொல்வேனப்பா
நிசுஷயமா யுன்மனதில் கவலைவேண்டாம்

பேர்பெருக வருத்தமது தீர்ந்துதிப்போ
போனதோர் பொருளுமக்கு வந்துசேரும்
பார்குலத்தில் நன்மையுண்டு கீர்த்திவரும்
பக்ஷமுடன் நினைந்தகார்யம் கைக்கூடுமே
ஆர்வுனக்கு யெதிரில்லை புவியின்மீது
அப்பனே இதுவெல்லாம் சித்தியாகும்.

வசனம்:—நீ இப்போது தொட்ட வீட்டின் பலன் யேதென்றால் உன் மனதில் கவலை வேண்டாம் வருத்தம் தீரும் சென்றுவிட்ட பொருளும் வந்து சேரும் நன்மையுண்டு கீர்த்தி யதிகரிக்கும் உனக்கு யெதிரி ஆருமே கிடையாது ஆகையால் இதுவெல்லாம் கூடிய சீக்கிரத்தில் முடியும் உத்தமம்.

## நூத்தி ஐம்பத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 157-வது பாட்டு

மனமதினில் நினைந்தகாரியம் பூர்த்தியாகும்
மைந்தனே கலக்கமது கொள்ளாதப்பா
வினயமாய் பிடித்தவியாதி தீருமப்பா
வேண்டியதோர் பொருளுமக்கு வந்தேசேரும்
தினமுடனே வியாஜ்யமது தீருமப்பா
தேவதைகள் உனைச்சான்று இருக்குதப்பா
நினவுடனே பூஜைபோட்டால் நன்மையாகும்
நிக்ஷயமா யிதுவெல்லாம் கூடுமப்பா.

வசனம்:—மனதில் நினைந்த காரியம் பூர்த்தியாகும் கலக்கமது கொள்ளாதே பிடித்த வியாதி தீரும் பொருளுமக்கு வந்துசேரும் வியாஜ்யம் தீரும் உன்னை கார்த்திருக்கப்பட்ட தேவதைகளுக்கு பூஜைபோட்டால் சீக்கிரத்தில் நன்மையாகும் இது உத்தமம்.

## நூத்தி ஐம்பத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 158-வது பாட்டு

வீடதுகட்டநீதான் விரும்பியே யெண்ணமிட்டாய்
நாடிநீதொடுவாயாகில் நஷ்டமே யடைந்திடுவாய்
தேடியதோர் பொருளுமக்கு நஷ்டமாகும்
தேசமெங்கு விரோதமது யதிகமாகும்
நாடிநின்றமாதும் நயவஞ்சனை செய்குவாள்
நாட்டமது கொள்ளாதப்பா இன்றுமேதான்

வாடிநீயலேவாயின்று வாதமே பேசாதப்பா
வீடதை யெண்ண வேண்டாம்விட்டுவிடு இந்தவீட்டை.

வசனம்:—நீ வீட்டை கட்ட யெண்ணமிட்டீர் அதனால் நஷ்டம் நேரி டும் கைப்பொருளும் விரயமாகும் விரோத மதிகரிக்கும் நீ யெண்ணமிட்ட மாதால் துன்பம் நேரிடும் உனக்கு அலைச்சல் மெத்தவுண்டு ஆனதால் இந்த வீடு மத்திபம்.

## நூத்தி ஐம்பத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 159-வது பாட்டு

மனவியது யெடுத்தவியாஜ்யம் திருமாயென்று
மனமதில் யெண்ணமிட்டாய் மைந்தாநீதான்
கனமுடனே கைச்சோர்ந்த பொருளும்தானும்
கண்காக்ஷி யாகவேதான் வருமோயென்றும்
தினமுடனே வியாபாரம் விர்த்தியாமாயென்றும்
தேடிநீ இந்தவீட்டைத் தொட்டீரப்பா
நினைவுடனே கணேசருடைய கடாக்ஷத்தாலே
நினைந்ததெல்லாம் கைக்கூடும் இரண்டுநாளில்.

வசனம்:—உன் மனைவி யெடுத்த வியாஜ்யம் ஜெயமாகுமா யென்றும் கைச்சோர்ந்த பொருள் வருமாயென்றும் வியாபாரம் அதிகரிக்கும் யென்றும் நீ யெண்ணமிட்டு இந்தவீட்டைத் தொட்டீர் ஆனதால் கணேசருடைய கடாக்ஷத்தினால் இரண்டு தினத்தில் கூடி சந்தோஷமடைவீர் இதுஉத்தமம்.

## நூத்தி அறுபதாவது வீட்டின் பலன்,

### 160-வது பாட்டு

வேண்டியதோர் திரவ்யமது யெடுத்துக்கொண்டு
வேகமுடன் ஓர்மாது மனைக்குவாராள்
தாண்டியதோர் திரவ்யமது சேருமப்பா
. தனிமையுடன் வியாபார மதிகமாகும்
பாண்டவரை காத்திட்ட கண்ணன்மருகன்
பரமதயா நிதியான கணேசர்கருணை
நீண்டமன மிட்டபடியாலே யப்பா
நினைத்ததெல்லாம் கைக்கூடி நிற்குமப்பா,

வசனம்:—அநேககோடி திரவ்யமெடுத்துக்கொண்டு ஓர்மாது உன் மனையில் வந்து வாழப்போகின்ருள் செய்யும் காரியம் பலிக்கும் வியாபார மதிகமாகும் இது யெல்லாம் கணேசர் கடாக்ஷத்தால் முடியும் உத்தமம்.

## நூத்தி அறுபத்தி ஒருவது வீட்டின் பலன்.

### 161-வது பாட்டு

நவகிரஹ தோஷமது உனக்கேவுண்டு
  நாட்டமுடன் யேழுதனில் சனியன்தானும்
அவமதியாம லிருப்பதாலே வுந்தனுக்கு
  அப்பனே யெடுத்தகாரியம் கூடாதின்று
பலமுடனே பொருளுனக்கு நஷ்டமாகும்
  பார்தனிலே விரோதமது யதிகமாகும்
கவமுடனே நீசெய்யும் வியாபாரமது
  கனிந்துமே கூடாதப்பா விட்டுவிடு.

வசனம்:—உனக்கு நவக்கிரஹ தோஷமும் சனியன் யேழில் இருப்பதால் யெடுத்த காரியம் கூடாது பொருள் நஷ்டமாகும் உலகத்தில் விரோதமதிகரிக்கும் நீசெய்யும் வியாபாரம் பலியாது ஆகையால் இந்தவீடு மத்திபம்.

## நூத்தி அறுபத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 162-வது பாட்டு

பார்த்தீரா இந்தவீட்டின் பலன்தானப்பா
  பண்புடனே கைக்கூடு மெடுத்தக்கார்யம்
சேர்ந்திட்ட அண்ணனுட விரோதமில்லை
  செப்பரிய பொருளுனக்கு மெத்தவுண்டு
பூர்த்திட்ட மாதாலே லாபமுண்டு
  பொல்லாப்பு மொன்றுமில்லை உலகம்தன்னில்
கார்த்திட்ட தெய்வமது வந்தேதரிற்கும்
  கர்த்தனுட அருளுனக்கு மெத்தவுண்டு.

வசனம்:—இந்த வீட்டின் பலன் நல்லது யெப்படியென்ருல் விரோதமடைந்த அண்ணன் கூடுவான் பொருள் அதிகமாகும் மாதாலே லாபமுண்டு தெய்வம் கார்க்க கார்த்திருக்கிறது துயரப்பட வேண்டாம் இது உத்தமம்.

## நூத்தி அறுபத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 163-வது பாட்டு

ஊருக்கு போகநீதான் மனமேயிட்டீர்
  உத்தமனே யெடுத்தகார்யம் கூடுமப்பா
மாருடனே மாடுமக்கள் உனக்கேசேரும்
  மைந்தனே கைப்பொருளும் லாபமாகும்
பேருடனே விவாகமது முடியுமப்பா
  பேசிடவே குருகடாக்ஷ முமக்கேவுண்டு
காருடைய வேளாண்மை யதிகமாகும்
  கணேசருட் கருணையது மெத்தவுண்டு.

வசனம்:—நீ இப்போ ஊருக்குப்போகவேண்டி மனமிட்டீர் அந்த விஷயம் ஜெயமாகும் யெடுத்தகாரியம் நிறைவேறும் மாடுமக்கள் சேரும் கைப்பொருளும் லாபமாகும் கலியாணம் கூடும் வேளாண்மை யதிகரிக்கும் உனக்கு குருகடாக்ஷம் இருப்பதால் இது நலமானது உத்தமம்.

## நூத்தி அறுபத்தி நான்காவது வீட்டின் பலன்.

### 164-வது பாட்டு

ஆகாது உந்தனுக்கு யெந்தகாரியம்
  அடுத்ததோர் வீட்டாலே போருமுண்டு
போகாதே விடந்தனிலே போகவேண்டாம்
  பொருளுனக்கு நஷ்டமாகி நிற்பாய்நீதான்
போகமுடன் வியாஜ்யமது ஜெயிக்காதப்பா
  பொல்லாங்கு வந்துஉம்மை சூழுமப்பா
யேகமுடன் குருகடாக்ஷ முமக்கேயில்லை
  யெந்தகார்யம் செய்திட்டால் பலியாதப்பா.

வசனம்:—நீ யெடுத்தக்காரியம் பலியாது அடுத்தவீட்டால் போருமுண்டு வொருவன் வீட்டிற்கு போகவேண்டாம் பொருள் நஷ்டமாகும் வியாஜ்யம் ஜெயிக்காது பொல்லாங்கு விளையும் குருகடாக்ஷ முமக்கில்லை இந்த கார்யமெல்லாம் மத்திமம்.

## நூத்தி அறுபத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 165-வது பாட்டு

வேண்டியதோர் பொருளுனக்கு வந்துசேரும்
  வேளாண்மை யதிகமாகும் இன்னம்கேளும்

பூண்டதோர் பூஷணங்கள் வந்துசேரும்
பெருமையுடன் மாதாலே லாபமுண்டு
நீண்டபணம் கொண்டுநீதான் வியாபாரம்செய்திர்
நினைந்திட்ட கார்யமது கூடுமப்பா
பாண்டவரின் சகாயனுன கண்ணன்மருகன்
பாரளந்த கணேசருட சகாயமுண்டு.

வசனம்:—உனக்கு வேண்டுமான பொருளும் சேரும் வேளாண்மை யதிகரிக்கும் பூஷணங்கள் அடைவீர் மாதாலே லாபமுண்டாகும் நீர் வியாபாரம்செய்ய யெண்ணமிட்டீர் அது கைக்கூடும் இது யெல்லாம் பாண்டவரின் சகாயனுன கண்ணன் மருமகனுகிய ஸ்ரீ கணேசர்க டாக்ஷத்தால் கூடும் இது உத்தமம்.

## நூத்தி அறுபத்தி ஆருவது வீட்டின் பலன்

### 166-வது பாட்டு

உன்மனதில் யெண்ணிருக்கும் கார்யமப்பா
உத்தமனே கைக்கூடி நிற்காதென்றும்
தென்புடனே தெய்வபலன் உனக்கேயில்லை
தேடியதோர் விரோதமது மெத்தவுண்டு
பண்புடனே கைப்பொருளும் நஷ்டமாகும்
பார்தனிலே மாதாலே ஆனியுண்டு
இன்பமுடன் யெதைநீதான் செய்தப்போதில்
இடுக்கமது வந்துசேரும் செய்யவேண்டாம்.

வசனம்:—நீ யெண்ணமிட்ட காரியமது கூடாது விரோத மதிக முண்டு கைப்பொருள் நஷ்டமாகும் மாதாலே கலக்கமுண்டு நீ யெந்த காரியம் செய்தபோதிலும் பலிக்காது இது மத்திமம்.

## நூத்தி அறுபத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 167-வது பாட்டு

பார்த்தீரோ இந்தவீட்டின் பலன் தானப்பா
பண்புடனே கற்காலமுமக்கே உண்டு
கார்த்திட்ட மாதுகூடி விவாகமாகும்
கனியுடனே இடையூறு வொன்றுமில்லை
யேர்த்திட்ட வியாபாரமது செய்வாயாகில்
யெப்போதும் பெரும்பொரு ளுண்டாகுமே

நீர்த்திட்ட பந்துக்கள் விரோதமில்லை
நினைவுடனே கணேசனது பூஜை செய்வாய்.

வசனம்:—இந்த வீட்டின் பலன் யேதென்றால் உனக்கு நற்காலம் லபிக்கும் நீ கோரியமாதே உனக்கு கலியாணமாகும் யேதும் இடையூறுக ளில்லை வியாபாரம்செய்தால் லாபம்கிடைக்கும் பந்துக்கள் விரோதமில்லை சுகமாகவாழ்வாய் நீர் கணேசனை பூஜை செய்வீர் உத்தமம்.

## நூத்தி அறுபத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 168-வது பாட்டு

தூரதேசம் சென்றபாலன் வருவானப்பா
துயரமதைக் கொள்ளாதே உன்மனதில்
பாரமது யேதுமில்லை செய்யுங் காரியம்
பலிக்குமடா கைப்பொருளும் லாபமுண்டு
நேரமாக மாதைக்காண நிற்கின்றாய்நீ
நினவுடனே இரண்டுநாளில் வந்துசேர்வாள்
கோரமுடன் விரோதமது பெங்குமில்லை
கோரிக்கை ஈடேரி ஜெயமடைகுவாயே.

வசனம்:—தொலைதூரம் சொல்லாமல் போன பாலகன் வருவானு யென்று மனமிட்டீர், அதி சிக்கிரத்தில் வருவான். நீ செய்யுங் காரியத்தில் பலிதமாகும். பொருளும் கிடைக்கும் ஓர் ஸ்திரீயை நோக்கி நிற்கின்றாய் அந்த ஸ்திரீயும் இரண்டுதினத்தில் வந்து சேருவாள் விரோதங்கிடையாது உனது கோரிக்கை ஈடேறும் இது உத்தமம்.

## நூத்தி அறுபத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 169-வது பாட்டு

ஒருவன்மீது வியாஜ்யம் செய்ய நீயும்போராய்
உத்தமனே பலியாது உந்தனுக்கு
பெருமையுடன் பொருள் சேர்க்க யெண்ணமிட்டீர்
பொய்யல்ல உந்தனுக்கு நஷ்டமாகும்
அருமையுடன் நீ பெற்ற புதல்வரப்பா
அய்யாவே உம்மைவிட்டு தூரம்நிற்பார்
கருமமது நீமெத்த செய்தாயப்பா
கணேசருட கருணையது உமக்கேயில்லை.

வசனம்:—ஒருவன் மீது வியாஜ்யம் யெடுக்கப்போகின்றீர் அது பலி யாது. பொருள்சேர்க்க எண்ணமிடுகின்றாய் சோரது நஷ்டமாகும் நீபெற்ற

புதல்வர் உம்மை விட்டுப் பிரிந்து விடுவார் நீர் மிக கருமத்தைச் செய்திருக்கின் நீர் கணேசர் அருளும் உமக்கில்லை இது மத்திபம்.

## நூத்தி எழுபதாவது வீட்டின் பலன்

### 170-வது பாட்டு

வீட்டைவிட்டு போகநீதான் மனமேயிட்டீர்
விமலனே அதனாலே கெடுதியில்லை
வாட்டமது உனக்குமெத்த உண்டாச்சுதிப்போ
வருத்தமெல்லாம் தீருமப்பா இனிமேல்தானே
நாட்டமுடன் பொருளுனக்கு சேருமப்பா
நாளுக்குநாள் விர்த்தியாகி பெருமை யடைவீர்
நீட்டமுடன் பந்துக்கள் விரோதமில்லை
நிர்மலமாய் பணம்படர்ந்து வாழ்வீரப்பா.

வசனம்:—நீர் இந்த வீட்டை விட்டு போக மனதிலிட்டீர் போனால் சுகமடைவீர், இதுவரைக்கும் வாட்டமாக மனக்கவலை யடைந்தீர் அதுகளெல்லாம் தீரும். பொருள் சேரும், பந்துக்கள் விரோதமில்லை, பெருமை யடைவீர் நிர்மல மனம்படைப்பீர் இது உத்தமம்.

## நூத்தி எழுபத்தி ஒராவது வீட்டின் பலன்

### 171-வது பாட்டு

அப்பனே துயரமது கொள்ளாதப்பா
ஆனதொரு மனைவிமக்கள் வந்துசேர்வார்
இப்பவே கஷ்டமெல்லாம் தொலையுமப்பா
இன்பமுடன் பிறர்பொருள் உனக்கேசேரும்
செப்பரிய மாடுகன்று மெத்தவுண்டு
செல்வமது யதிகமாகி பெருமையடைவீர்
ஒப்பவே குருகடாக்ஷ முமக்கேவுண்டு
உத்தமனே இந்த வீட்டின் பெருமைதானே.

வசனம்:—நீ துயரம் மனதில் வையாதே மனைவி மக்கள் வந்து சேருவார் கஷ்டம் தொலையும் பிறர் பொருளை அடைவீர் மாடு கன்று மெத்த வுண்டு செல்வ மதிகமா யுண்டாகும் இது உத்தமம்.

## நூத்தி எழுபத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 172-வது பாட்டு

உந்தனிட வீடதனில் பொருள்போச்சென்று
உத்தமனே மனமிட்டு தொட்டீரிப்போ
அந்தமாக சிகப்புக்கல் பொதிந்தபொருள்தான்
அதுசென்று ஈரெட்டுநாளாச்சு திப்போ
பந்தமுடன் மானிரமடைந்த மாதொருத்தி
பக்ஷமுடன் அந்தபொருள் பதனம்செய்தாள்
சொந்தமாக இரண்டுநாளில் வந்துசேரும்
சுந்திரனே ஆயாசம் கொள்ளாதப்பா.

வசனம்:—உன்னுடைய வீட்டினில் பொருள் போச்சென்று மனமிட்டு இந்த வீட்டைத் தொட்டதினல் அது சிகப்புக்கல் பொதிந்த நகை அதை யெடுத்தது மானிரமுடைய மாதொருத்தி இன்னும் இரண்டு தினத்தில் நகை வந்துசேரும் ஆயாச மடையாதே, இது உத்தமம்.

## நூத்தி எழுபத்தி மூன்ருவது வீட்டின் பலன்

### 173-வது பாட்டு

தேடரிய மாடுவீடு போகுமப்பா
தேவையான பொருளுமது கைசோர்ந்துவிடும்
கோடான பந்துகளும் விரோத மாவார்
கொண்ட மனைவி மக்களுமே விட்டுபிரிவார்
ஆடாத வியாஜ்யமெல்லாம் ஆடிதோர்ப்பீர்
அப்பனே யெடுத்தகார்ய முடியாதின்று
நாடாதே யெந்த கார்யம் செய்யாதப்பா
நாதனுட அருளுனக்கு இல்லையில்லை.

வசனம்:—உன்னுடைய மாடு வீடு போகும் கைப் பொருள் நஷ்டமாகும் பந்துக்கள் விரோத மடைவார் வியாஜ்யம் பலியாது யெடுத்தகாரியம் முடியாது, யெந்தகாரியமும் செய்யாதே இது மத்திமம்.

## நூத்தி எழுபத்தி நான்காவது வீட்டின் பலன்

### 174-வது பாட்டு

புத்திரரை பெற்றுநீதான் சுகமாவாழ்வாய்
புவிதனிலே மாதாலே லாபமுண்டு

யெத்திசையில் விரோதங்கள் உனக்கேயில்லை
யெடுத்தகாரியம் பலிக்குமப்பா லாபந்தானே
நத்திநிதம் வியாபார மதிகமாகும்
நாட்ட மிட்ட மாதுடனே கூடிவாழ்வீர்
சத்திசிவ காமிபெற்ற கணேசனருள்
சதாவுனக்கு பலிக்குமப்பா நன்மைதானே.

வசனம்:—நீர் புத்திரனைப் பெற்று சுக மடைவீர் ஓர் ஸ்திரீயாலே லாபமுண்டு யெத்திசையிலும் விரோத மில்லை, யெடுத்தகாரியம் பலிக்கும் வியாபாரம் விர்த்தியாகும் நீர் யெண்ணமிட்டவருடன் கூடி வாழ்வீர் உனக்கு கணேசர் அருள் அதிகமாகும், இது உத்தமம்.

## நூத்தி எழுபத்தி ஐந்தாவது வீட்டின் பலன்.

### 175-வது பாட்டு

அப்பனே எண்ணமிட்ட கார்யமதை
அன்புடனே சொல்லுகின்றேன் கேளுமப்பா
செப்பரிய உந்தனிட வீட்டில் தன்னில்
செல்வதியாம் மாதொருத்தி கர்ப்பம்தன்னில்
ஒப்பரிய ஆண்புதல்வன் உதித்தானப்பா
உலகமதில் அவனாலே கியாதியுண்டு
இப்பவே உன்மனதில் எண்ணமிட்ட
உத்தமனே கார்யமெல்லாம் கைகூடுமே.

வசனம்:—நீர் இப்போ யெண்ணமிட்டு தொட்டவீட்டின் பலன் யென்னவென்றால் உனது வீட்டில் ஓர் பெண்பால் கர்ப மடைந் திருக்கின் றான், அம்மாதின் வயிற்றில் ஆணு பெண்ணு பிறக்கிறது யென மனச்சஞ் சல மடைந்தீர் அது பிள்ளைதான். அதனாலே உலகமெங்கும் கியாதியடை வீர், இது உத்தமம்.

## நூத்தி எழுபத்தி ஆருவது வீட்டின் பலன்.

### 176-வது பாட்டு

ஆராலு முடியாதப்பா இந்தவீட்டில்
அடைந்திடும் பலன் தன்னை சொல்வேன்கேளு
யாராலும் வேந்தனாலே உனக்கேயிப்போ
பலபொருளும் வந்தடையும் உன்மனையில்
தீராத வியாஜ்யமெல்லாம் தீருமப்பா
தேடியதோர் வியாபாரம் அதிகமாகும்

கூரான வேல்பிடித்தோன் தமயனான
கணேசருட கருணையது மெத்தவுண்டு.

வசனம்:—இந்த வீட்டின் பலன் யென்னவென்றால் வேந்தனால் உனக்கு வேண்டிய பொருள் கிடைக்கும் வியாஜ்யம் தீரும் வியாபார மதிகமாகும் கணேசருடைய கருணை யதிகமாகும், இது உத்தமம்.

## நூத்தி எழுபத்தி ஏழாவது வீட்டின் பலன்.

### 177-வது பாட்டு

பய்யவே உன்மனதில் யெண்ணமிட்ட
பரிவான கார்யமது கூடாதப்பா
மெய்யுடனே திரேகமதில் வியாதிகாணும்
மேன்மையுடன் பண்டிதனால் தீரவேணும்
நய்யமுடன் கருமமது உம்மைச்சுற்றும்
நாடெங்கும் விரோதங்கள் அதிகமாகும்
செய்யுடனே கைப்பொருளும் நஷ்டமாகும்
செப்பியதோர் சனிவுனக்கு யேழில்தானே.

வசனம்:—உனக்கு சனி எழாம்வீட்டி லிருப்பதால் யெண்ணுதெல்லாம் யெண்ணமிடுகின்றீர் யெடுத்தகாரியம்கைகூடாது திரேகத்தில் வியாதிசேரும் தரும மும்மைச் சுற்றும் விரோத மதிகமாகும் கைப்பொருள் நஷ்டமாகும் இது உத்தமம்.

## நூத்தி எழுபத்தி எட்டாவது வீட்டின் பலன்.

### 178-வது பாட்டு

நவகிரஹத்தின் தோஷமில்லை உனக்கேயின்று
நாடிபோகும் கார்யமது கூடுமப்பா
அவனிதனில் உனைபிரிந்த மாதுதானும்
அன்புடனே வீடுவந்து சேர்வாளப்பா
தவமுடனே மக்கள்பாக்கியம் பெருவாயப்பா
கன்னியாலே லாபமது கிடைக்கும்தானே
தவமது மெத்தமுந்தி செய்தாய்நீதான்
தனிமையுடன் வேளாண்மை யதிகமாகும்.

வசனம்:—உனக்கு நவகிரஹத்தின் தோஷமில்லை, நாடிபோகும் காரியம்பலிக்கும் உன்னைப் பிரிந்த மாது வீடுவந்து சேர்வாள் மக்கள் பாக்கியம் பெருவீர் ஓர் மாதாலே லாபமடைவீர் இது உத்தமம்.

## நூத்தி எழுபத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 179-வது பாட்டு

இந்தநாட்டை விட்டுநீதான் போகயெண்ணம்
இச்சையுடன் மனமதில் நாட்டமிட்டீர்
அந்தமாக போகும்ராஜ்யம் சுகமேயாகும்
அலச்சலு முனக்கில்லை அங்குதானே
விந்தையான மாதொருத்தி நேசமாவாள்
விமலனே பொருளுனக்கு யதிகம்சேரும்
சொந்தமான கார்யமெல்லாம் கூடிநிற்கும்
சுந்திரனே நம்பிநீதான் போகுவீரே.

வசனம்:—நீர் இந்த நாட்டை விட்டு மறுதேசம் போக யெண்ணமிட்டீர் அதனால் சுகமுண்டு அலச்சல் கிடையாது ஓர் மாது நேசமாவாள் அம்மாதால் பொருள்சேரும் யெந்தகார்யம் செய்தபோதிலும் லாபமடைவீர் இது உத்தமம்.

## நூத்தி எண்பதாவது வீட்டின் பலன்

### 180-வது பாட்டு

ஜென்மத்தில் சூரியனும் சேர்ந்தானப்பா
சுந்திரனே தேகமது நலிந்துநிற்கும்
தென்புடனே ஈரெட்டு நாளாய்தானே
தேடியே வுந்தனை வாட்டுதிப்போ
பண்புடனே பொருள்சேத மாகுமப்பா
பக்ஷமுடன் மருந்தீந்தால் தீராதப்பா
நன்புடனே கஷ்டமது வந்தேசேரும் .
நாட்டமதுக் கொள்ளாதே யெக்காரியமீது.

வசனம்:—உனக்கு ஜென்மத்தில் சூரியன் பார்வை யானதால் திரேகம் நலிந்து நிற்கும் வியாதி யதிகமாகும், பொருள் சேதமடையும், மருந்தீந்தால் தீராது. இதை நம்பவேண்டாம். கஷ்டம்நேர்ந்திடும் இது மத்திபம்.

## நூத்தி எண்பத்தி ஒருவது வீட்டின் பலன்

### 181-வது பாட்டு

ஆருமாத மாகவே தான் தேகம் தன்னில்
அடர்ந்துமே வியாதியது தொடர்ந்துதப்பா

பாருலகில் வைத்தியனாலே மருந்தீய்ந்தால்
   பக்ஷமுடன் தீர்ந்துநீயும் சௌக்கியமாவாய்
சேருமப்பா பிறர்பொருள் உந்தனுக்கு
   செல்வதியும் உன்மனையில் வந்தேவாழ்வாள்
தாருமப்பா தர்மமது கோடிசெய்வீர்
   தனயனே கர்மமெல்லாம் தொலைந்துபோச்சு.

வசனம்:—உனக்கு ஆறுமாதமாக தேகத்தில் வியாதிதொடர்ந்தது வைத்தியனால் மருந்தீய்ந்தால் தீரும். பிறர்பொருள் உமக்கடையும், மாது உன்மனையில் வந்து வாழ்வாள் தர்மம்செய்வீர் சுகமடைவீர் இது உத்தமம்.

## நூத்தி எண்பத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 182-வது பாட்டு

பார்க்காதே இதாமான யோசனைகள்
   பக்ஷமுடன் யெடுத்தகாரியம் பலிக்குமப்பா
சேர்க்காதே அயல்வீட்டின் மனிதரப்பா
   சேரவே துன்பமது உனக்கேயாகும்
பூர்க்காத மாதொருத்தி வருவாளப்பா
   பூவையால் லாபமது யதிகமுண்டு
தீர்க்காத வியாஜ்யமது தீருமப்பா
   தேசமெல்லாமுமைக்கண்டால் சந்தோஷமாவார்.

வசனம்:—நீர் இதாமான யோசனை செய்யாதே யெடுத்த காரியம் முடியும் அயல்வீட்டின் மனிதரை சேர்க்காதே அவரால் துன்பம்வரும் வருத்தமடையாதே மங்கையொருத்திவருவாள் அம்மாதால் லாபமுண்டு யெடுத்த வியாஜ்யம் தீரும் உம்மை கண்டவர் சந்தோஷமடைவார் உத்தமம்.

## நூத்தி எண்பத்தி மூன்றுவது வீட்டின் பலன்

### 183-வது பாட்டு

கேட்டதோர் வீட்டின்பலன் சொல்வேனப்பா
   கிரமத்துடன் நீகேளும் யெந்தன்வார்த்தை
நாட்டமுடன் கைப்பொருளும் நஷ்டமாகும்
   நாடிபோகும் காரியமது பலியாதப்பா
வாட்டமுடன் துயாமது யதிகமாகும்
   வாழாது மனையிலதானே மாதுயென்றும்
நீட்டமுடன் பந்துக்கள் விரோதமாவார்
   நீநினைக்க வேண்டாமப்பா இந்தவீட்டை.

வசனம்:—நீர் கேட்டபலன் சொல்வேன் கேளும் கைப்பொருள் நஷ்டமாகும் துன்ப மதிகரிக்கும் கொண்டமாது மனையில் வாழமாட்டாள் பந்துக்கள் விரோதமடைவார் இந்த வீடு கெட்டது மத்திமம்.

## நூற்றி எண்பத்தி நான்காவது வீட்டின் பலன்

### 184-வது பாட்டு

உண்மையுடன் எதிராளி வணங்கி நிற்பார்
உன்மனதில் கலக்கமது நிருமப்பா
தென்புடனே வெளியூரிலிருந்து தானே
தேடியே லாபமது வந்தே சேரும்
நன்புடனே குலதேவதைக்கு பூஜைப்போடு
நாடியதோர் கார்யமது கூடுமப்பா
இன்பமுடன் அடயாளம் வேணுமென்றால்
இச்சையுடன் இடதுகண்மேல் மச்சமுண்டு.

வசனம்:—உனக்கு இருக்கப்பட்ட யெதிராளிகள் வணங்கி நிற்பார் மனதில் கலக்கம்வேண்டாம் வெளியூரி லிருந்து லாபம் அடைவீர் ஆனால் உன் குலதேவதைக்கு பூஜைப்போடவும் இதற்கு திருஷ்டாந்திரம் வேண்டுமானல் உன்னுடைய இடது நேத்திரத்தின்மீது மச்சமிருக்கிறது அதைப் பார்த்துக்கொள்ளவும் உத்தமம்.

## நூற்றி எண்பத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 185-வது பாட்டு

எண்ணமிட்ட கார்யமது கூடுமப்பா
இச்சையுடன் அண்ணன் தம்பியாலேமுடியும்
திண்ணமுடன் மாதாலே லாபமுண்டு
தேடியதோர் வியாபார மதிகமாகும்
விண்ணமுடன் போனதொழில் கூடுமப்பா
வேண்டிநீ யெத்னமது செய்வாயின்று
பண்ணமுடன் இவ்வருடம் தன்னில்தானே
பலனுனக்கு அதிகமாகும் சொன்னேனின்று.

வசனம்:—நீர் எண்ணமிட்ட கார்யம் கூடும் அந்த கார்யம் அண்ணன் தம்பியால் முடியும் மாதாலே லாபமுண்டு வியாபார மதிகமாகும் தள்ளிவிட்ட வேலையானது கூடும் அதற்கு முயற்சியெடுத்தால் முடியும். இவ்வருடத்தில் உனக்கு லாபமுண்டு உத்தமம்.

## நூத்தி எண்பத்தி ஆருவது வீட்டின் பலன்

### 186-வது பாட்டு

திங்களதுவாரம் தேடிவிரதமேயிரு
தேடியதோர் வியாபார மதிகமாகும்
பங்கமன்றி கலியாணம் கூடுமப்பா
பண்புடனே சம்பந்தம் சேருமின்று
மங்களமாய் புத்திரரை பெருவீர் நீதான்
மனதில் நீனினைந்த கார்யம் முடியுமப்பா
சங்கரனுர் புதல்வனுன கணேசருன்னை
சதாகார்த்து பரிபாலிப்பார் உண்மைதானே.

வசனம்:— நீ திங்கட்கிழமை தேடி விரத மிருப்பீர் அதனுல் சுக முண்டு கலியாணம் கூடும் சம்பந்தம் சேரும் புத்திரபாக்கியம் பெருவீர் நீ எந்தகாரியம் செய்தாலும் கைகூடும் கணேசர் அருள் மெத்தவுண்டு உத்தமம்.

## நூத்தி எண்பத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 187-வது பாட்டு

மனவருத்த மதிகமாக இருக்குமப்பா
மைந்தனே நினைத்தகார்யம் கூடாதப்பா
கனமுடனே யெத்தொழில் செய்தால் நஷ்டம்
கண்கண்டு விசாரித்து செய்வாயப்பா
நினைவுடனே மாதாலே துன்பமுண்டு
நீணிலத்தில் விரோத மதிகமாகும்
திடமுடனே இருபத்தோர் மாதம் போனுல்
செய்யும் கார்யம் ஸ்திரமாகு முந்தனுக்கு

வசனம்:—இப்போதுமனவருத்தம் அதிகமாயிருக்கும்யெந்ததொழில் செய்தாலும் நஷ்டமாகும் யெடுத்த காரியம் கைகூடாது மாதாலே துன்ப முண்டு விரோத மதிகரிக்கும் நீ யெந்தக் காரியம் செய்தபோதிலும் நிதானித்துச் செய்யவும் இது இருபத்தோர்மாதம் சென்ற பிறகு ஜெய மாகும் இது மத்திபம்.

## நூத்தி எண்பத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 188-வது பாட்டு

வேண்டியதோர் திரவ்யத்தின் மீதிலப்பா
இச்சையாக இருக்கிறது உந்தனுக்கு
கண்டிதமாய் பலிக்குமடா இப்போதானே
கணக்கில்லா பெதிராளி இருக்கின்றார்கள்
தாண்டியவரை ஜெயிப்பாய் பயமேயில்லை
தர்பரனே உந்தனுக்கு லாபம்கிட்டும்
மண்டலத்தி லுன்னுடைய தேவதைக்கு
மகிழுடனே பூஜை நீதான் போடுமப்பா.

வசனம்:—உனக்கு பணத்தின்மீது அதிக அபேக்ஷை இருக்கிறது ஆனால் விரோதிகள் அதிகமா யிருக்கின்றார். நீ பயப்படவேண்டாம் ஜெய மடைவீர் உனக்கு லாபம் கிடைக்கும் குலதேவதைக்கு பூஜைப்போடவும் இது உத்தமம்.

## நூத்தி எண்பத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 189-வது பாட்டு

மனக்கவலை தீருமப்பா துயரம் வேண்டாம்
மண்டலத்தில் தனலாப மெத்தவுண்டு
கனமுடனே குடும்பவிர்த்தி யதிகமாகும்
காணவே புத்திரபாக்கிய மெத்தவுண்டு
தினமுடனே திரேகமதில் கொண்டவியாதி
தீருமடா க்ஷணப்போதில் உந்தனுக்கு
நினவுடனே யெத்தொழிலும் செய்வாயாகில்
நினைத்ததெல்லாம் பலிக்குமடா இன்றுதானே.

வசனம்:—மனக்கவலை தீரும் துயரம் வேண்டாம் லாபம் கிடைக்கும், குடும்ப விர்த்தியாகும் புத்திர பாக்கியம் பெருவீர் திரேகத்தில் வியாதி தீரும் யெத்தொழில் செய்தாலும் கைக்கூடும் இது உத்தமம்.

## நூத்தி தொண்ணூருவது வீட்டின் பலன்.

### 190-வது பாட்டு

திட்டமுடன் இந்தவீட்டை தொட்டீரப்பா
வேண்டியதோர் கைப்பொருள் நஷ்டமாகும்

மிட்டமுடன் யெடுத்தகாரியம் பலியாதப்பா
நீணிலத்தில் விரோதமது அதிகமாகும்
வட்டமுடன் மாலையிட்ட மாதும் பிரிவாள்
வண்மையுடன் வேளாண்மை பலியாதப்பா
பட்டமுடன் அரசாளும் வேந்தனுக்கு
பயந்துமே நடக்கவேணும் இனிமேல்தானே.

வசனம்:—நீர் இந்த வீட்டை தொட்டபடியால் கைப்பொருள் நஷ்டமாகும் யெடுத்த காரியம் பலியாது விரோத மதிகமாகும் மாலையிட்டமாது பிரிவாள் வேளாண்மை பலியாது அரசருக்கு பயந்து நடக்க வேண்டியது, இது மத்திபம்.

## நூத்தி தொண்ணூத்தி ஓராவது வீட்டின் பலன்.

### 191-வது பாட்டு

யெந்தகார்யம் செய்தபோதிலும் கூடுமப்பா
யெழிலுடனே குருகடாக்ஷ மெத்தவுண்டு
அந்தமாக கலியாணம் கூடுமப்பா
அவனிதனில் பிறர்பொருள் சேருமப்பா
பந்தமில்லா வியாபார மதிகரிக்கும்
பக்ஷமுடன் போகும் கார்ய முடியுமப்பா
சொந்தமான மனிதருமே வந்துசேர்வார்
கிலேசமது கொள்ளாதே மனதில்தானே.

வசனம்:—நீர் யெந்த கார்யம் செய்தபோதிலும் கைக்கூடும் கலியாணம் சேரும், பிறர்பொருள் அடைவீர் வியாபார மதிகமாகும் இப்போது யெண்ணமிட்ட காரியம் ஜெயமாகும் சொந்தமான மனிதர்வந்து சேர்வார் நீயேதும் துக்கப்படவேண்டாம் இது உத்தமம்.

## நூத்தி தொண்ணூத்தி இரண்டாவது வீட்டின் பலன்.

### 192-வது பாட்டு

நவகிரஹத்தின் தோஷமது வொன்றுமில்லை
நாடிவந்தப் பீடையெல்லாம் போச்சுதப்பா
அவனிதனில் ஒருவனையே நம்பி நின்றீர்
அதனாலே கெட்டயெண்ணம் மெத்தவுண்டு
தவமுடனே பாதகனைப் பிரிவீரானால்
தன்மையுடன் வுன்காரியம் ஜெயமாகுமே

பவமுடனே மனம்போல செல்வீரானல்
பலிக்குமடா வுந்தனுக்கு குருபலத்தால்.

வசனம்:—உனக்கு நவகிரஹத்தின் தோஷமில்லே, பீடையெல்லாம் தொலேந்துவிட்டது ஒருவனே நம்பியிருக்கின்றீர் அவனலே கெடுதிசம்பவிக்கும் அப்பாதகனைப் பிரிந்தால் நலம் உன்மனம்போல் செய்யும்காரியம் குரு கடாக்ஷித்தால் சுகமாகும் உத்தமம்.

## நூத்தி தொண்ணூத்தி மூன்ருவது வீட்டின் பலன்

### 193-வது பாட்டு

நீர்தொட்ட வீட்டின்பலன் சொல்வேனின்று
நிகழுடனே யெடுத்தகார்ய முடியாதப்பா
நேர்மையுடன் கைப்பொருளும் நஷ்டமாகும்
தேடியதோர் மாதுஉம்மை பிரிந்துநிற்பாள்
பார்தனிலே விரோதமது அதிகமாகும்
பண்புடனே கூட்டுதொழி லாகாதப்பா
ஆர்உனக்கு சொன்னபோதில் யெடுக்கமாட்டாய்
அய்யனே இந்தவீடு கெட்டதாச்சே.

வசனம்:—நீர் இப்போதுதொட்ட வீட்டின் பலன்யேதென்ருல் யெடுத்தகாரியம் முடியாது, கைப்பொருள் நஷ்டமாகும், மாது விட்டுப்பிரிவாள், கூட்டுத் தொழில் செய்யவேண்டாம் உனக்கு எவர் சொன்ன போதிலும் யெடுக்கமாட்டீர் ஆகையால் இந்தவீடு கெட்டது இது மத்திபம்.

## நூத்தி தொண்ணூத்தி நான்காவது வீட்டின் பலன்

### 194-வது பாட்டு

புத்திரரை பெற்றுநீதான் வாழ்வீரப்பா
பெருமையுடன் தனலாப முமக்கேசேரும்
உத்தியோகம் கிடைக்குமப்பா வுந்தனுக்கு
உத்தமனே திரேக சௌக்கிய மாகுமிப்போ
நத்திஇன்று செய்யும்கார்யம் ஜெயமாகுமே
நலமுடனே குருகடாக்ஷமு மக்கேவுண்டு
பத்தியுடன் நவகிரஹத்தை சுற்றிவந்தால்
பலனதிக மாகுமடா பாரிவ்வீட்டை.

வசனம்:—நீர் புத்திரரை பெருவீர் தனலாபம் கிடைக்கும், உத்தி யோகம் உண்டாகும், திரேக சௌக்கியமாகும் இப்போது செய்யும் கார் யம் பலிக்கும் உனக்கு குருகடாக்ஷ மதிகரித்திருக்கிறது ஆகையால் நீர் நவ கிரஹ கோவிலுக்குச்சென்று சுற்றிக்கொண்டுவந்தால் நலமாகும் இது உத்தமம்.

## நாத்தி தொண்ணூத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 195-வது பாட்டு

தொலதூரம் சென்றபாலன் வருவானப்பா
தொல்லையெல்லாம் தொலையுமப்பா வுந்தனுக்கு
பலமான மாதொருத்தி நேசமாவாள்
பக்ஷமுடன் பொருள் லாபம் மெத்தவுண்டு
நிலைமையுடன் கலியாணம் கூடுமப்பா
நினைந்ததெல்லாம் ஜெயமாகி நிற்குமிப்போ
அலையாதே வேறெண்ணமிட்டு நீதானப்பா
அய்யனுட கருணையது மெத்தவுண்டு.

வசனம்:—தொலைதூரம் சென்ற பாலன் வருவான் உன் தொல்லை யெல்லாம் தீர்ந்துவிட்டது. மாதொருத்தி நேசமாவாள் அம்மாதால் பொருள் லாபம் கிடைக்கும் நினைத்ததெல்லாம் ஜெயமாகும் நீர்யோசிக்கும் அலைச்சல்படவேண்டாம் குருகடாக்ஷ மிருக்கிறது உத்தமம்.

## நாத்தி தொண்ணூத்தி ஆருவது வீட்டின் பலன்

### 196-வது பாட்டு

அப்பனே இந்தவீட்டின் பலனைச்சொல்வேன்
அன்புடனே நீகேளும் மெய்தன்மொழியை
செப்பரிய தீமையது விட்டுப்போச்சி
சம்பத்து மதிகமாகி வாழ்வாயப்பா
ஒப்பரிய உலகமதில் விரோதமில்லை
உத்தமனே அலைச்சலில்லை உத்தியோகம்கூடும்
தப்பிதங்கள் யொன்றுமில்லை உந்தனுக்கு
தெய்வத்தின் சகாயமுண்டு யென்றுதானே.

வசனம்:—இந்த வீட்டை தொட்டதால் உன்னை யனுசரித்த தீமை யகன்றுவிட்டது சம்பத்து மதிகமாகும், உலகமதில் விரோதமில்லை அலைச் சல் கிடையாது தெய்வம் சகாயம் செய்யும் இது உத்தமம்.

## நூத்தி தொண்ணூத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 197-வது பாட்டு

கன்னியொருத்தி வீட்டைவிட்டு போனாளென்று
கனமுட்னே யெண்ணமிட்டு தொட்டீரப்பா
சென்னிதனில் அம்மாது வெகுதூரம்சென்றாள்
செப்பவே மானிர மனிதனொருவன்
உன்னிதமாய் அழைத்துக்கொண்டு போனானிப்போ
உத்தமனே கஷ்டமது மெத்தவுண்டு
திண்ணமாயம்மாது வரவேமாட்டாள்
தேடிநீ யலையாதே இதுதானுண்மை.

வசனம்:—நீர் ஓர் நன்மையான மாது வீட்டை விட்டு போனாளென்று யெண்ணமிட்டு இவ்வீட்டைதொட்டீர் அம்மாது மானிரமடைந்த புருடனோடேகூடிசென்றாள் அங்கு கஷ்ட மெத்தவுண்டு இனி வருவது கஷ்டம் இது மத்திமம்.

## நூத்தி தொண்ணூத்தி எட்டாவது வீட்டின் பலன்

### 198-வது பாட்டு

தங்கத்தில் சேர்ந்ததொரு நகைதானப்பா
தனிமையுடன் போச்சுதென்று தொட்டீரிப்போ
பங்கமன்றி யன்னகைதான் மாதுகையில்
பண்மையுடன் யகப்பட்டு விட்டுதப்பா
மங்களமா யீரெட்டுதினத்தில் தானே
மைந்தனே உந்தனுக்கு வந்துசேரும்
அங்கமதில் அம்மாதுக்கு குறிப்புவுண்டு
அப்பனே இடதுகையில் மச்சம்பாரீர்.

வசனம்:—நீர் இப்போ யெண்ணமிட்ட காரியமாகாது யென்னவென்றால் தங்கநகை யொன்று கைசோர்ந்துவிட்டது அது இதரமான மாதொருத்தி யெடுத்து பதனம் செய்திருக்கின்றாள் இனி ஈரெட்டுநாளில் கொண்டுவந்து கொடுப்பாள் அம்மாதுக்கு இடது கையில் மச்சமிருக்கும் அதை அடையாளம் பார்த்துக்கொள்ளவும் இது உத்தமம்.

## நூத்தி தொண்ணூத்தி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 199-வது பாட்டு

எடுத்தவியாஜ்யம் கூடுமாயென யெண்ணமிட்டீர்
இன்பமுடன் சொல்கிறேன் நீதான்கேளும்.

அடுத்ததோர் மாதமதில் திரும்பப்பா
அன்புடனே பொருநஷ்ட மில்லைதானே
கடுத்ததோர் மாதாலே லாபமுண்டு
கலகமது யேதுமில்லை வுனக்குதானே
தடுத்து நீ யோசிக்காதே யென்றுதானே
தனிமையுடன் கைக்கூடு மெந்தகாரியம்.

வசனம்:— நீர் யெடுத்த வியாஜ்யங் கூடுமா யென யெண்ணமிட்டு யிருக்கின்றீர் ஆனல் அது ஒரு மாதத்தில் ஜெயமாகும் பொருள் நஷ்ட மாகாது ஓர் மாதாலே லாபமுண்டு கலகமது யேதுமில்லை நீர் யேதுக்கும் யோசிக்காதே இது உத்தமம்.

## இருநூருவது வீட்டின் பலன்

### 200-வது பாட்டு

சந்தகாரியம் செய்யநீதான் யெண்ணமிட்டீரோ
இயல்புடனே யக்கார்யம் கூடாதப்பா
சொந்தமான பொருளுனக்கு சேதமாகும்
சேர்த்திட்ட பந்துக்கள் விரோதமாவார்
பந்தமில்லா சனியனுக்கு யேழில்தானே
பலதேசம் சுற்றிநீயும் திரிவாயப்பா
அந்தமான வீடுமாடு பிரியுமப்பா
அய்யனுட செயலுனக்கு இல்லைஇல்லை.

வசனம்:—நீர் யெதை நினைத்து தொட்டீரோ யக்கார்யம் கூடாது உன் கைப்பொருளும் நஷ்டமாகும் பலதேசம் சுற்றுவீர் பந்துக்கள் விரோத முண்டு வீடு மாடு தோர்வை யடைவீர் இதற்கு காரணபூதமா யிருந்து சனியன் செய்கின்ருன் இது மத்திபம்.

## இருநூத்தி ஓராவது வீட்டின் பலன்

### 201-வது பாட்டு

எண்ணமிட்ட கார்யமது கூடுமப்பா
யெதிராளி வணங்கி யும்மை பணிவாரப்பா
திண்ணமுடன் வியாபாரம் அதிகமாகும்
தேடியதோர் பொருளுனக்கு வந்துசேரும்
மண்ணளந்த மாதவன் மருகனுன
மாசில்லா கண்ணசருட கருணையுண்டு

விண்ணமுடன் மாதாலே லாபமுண்டு
　　விட்டுதடா வுந்தனுக்கு சனியன்தானே.

வசனம்:—நீர் இப்போது எண்ணமிட்ட காரியம் தடையின்றி கைகூடும் யெதிராளிகள் வணங்கி நிற்பார் வியாபாரம் அதிகமாகும் தேடிய பொருளும் சேரும் ஓர் மாதாலே லாபமுண்டு கணேசருடைய அருள் யிருப்பதால் உம்மைப் பிடித்த சனிபகவான் தொலைந்து விட்டான் இது உத்தமம்.

## இருநூத்தி இரண்டாவது வீட்டின் பலன்

### 202-வது பாட்டு

அப்பனே நீமெத்த துன்பப் பட்டாய்
　　ஆனாலும் சொல்லவும் முடியாதப்பா
செய்யரிய பொருள்நஷ்ட மாச்சுதப்பா
　　சேனவிடம் திரிந்துநீயும் வந்தாயிப்போ
ஒப்பில்லா மாதாலே துன்பமாச்சு
　　உள்ளதோர் பந்துக்களை பிரிந்தீரப்பா
தப்பாமல் குருகடாக்ஷத்தாலே தானே
　　தன்மையுடன் இதுவெல்லாம் கூடிவாழ்வீர்.

வசனம்:—நீர் மெத்த துன்பம் அடைந்தீர் இதைச் சொல்லமுடியாது பொருள் நஷ்டமடைந்தீர் அநேக விடங்கள் திரிந்தலைந்து வந்தீர் மாதாலே துன்பம் நேர்ந்தது பந்துக்களை விட்டுப் பிரிந்தீர் உனக்கு இது யெல்லாம் கைக்கூடி நிற்கும் யேனென்றால் குருகடாக்ஷ யிருப்பதால் யெல்லாம் கைகூடிவரும் இது உத்தமம்.

## இருநூத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 203-வது பாட்டு

நவகிரஹத்தின் தோஷமது மெத்தவுண்டு
　　நாள்தோறும் சுற்றிவந்து பூஜைசெய்வாய்
அவனிதனில் நீநினைத்த கார்யமெல்லாம்
　　அய்யனே கைக்கூடி நிற்குமப்பா
தவமுனிவர் சேவையது நீதான்செய்வீர்
　　தாரணியில் கைப்பொருளும் வந்துசேரும்
புவிதனிலே வந்தணுகும் குருகடாக்ஷம்
　　புண்ணிய[illegible].

வசனம்:—உனக்கு கிரஹங்களின் தோஷமது மெத்தவுண்டு ஆனல் நீர் கோவிலுக்குச்சென்று சுற்றிவந்தால் நீர் நினைத்தகார்யம் கூடும் பெரியோர்களை யடைவீர் கைப்பொருளும் வந்துசேரும் குருகடாக்ஷ முண்டாகும் இது உத்தமம்.

## இருநூத்தி நான்காவது வீட்டின் பலன்

### 204-வது பாட்டு

ஏனப்பா இன்னம்நீதான் கவலைக்கொண்டீர்
　　யெடுத்தகாரியம் பலியாது சொன்னேனிப்போ
காணப்பா கைப்பொருளும் நஷ்டமாகும்
　　கண்டவரும் உனைக்கண்டு விரோதமாவார்
தானமுடன் வேளாண்மை பலியாதப்பா
　　தயவுடனே மக்களுன்னை பிரிந்துநிற்பார்
நாணமன்றி கச்சேரி யேறிநிற்பார்
　　நயமுடனே வுந்தனுக்கு நாள்போதாதே.

வசனம்:—நீர் கவலை பட்டு நிற்கிறீர் ஆனல் யெடுத்த கார்யம்கூடாது பொருள் நஷ்டமாகும் பகையாளிகள் மெத்தவுண்டு மக்கள் பிரிவார் கச்சேரி யேறிவருவீர் இது மத்தியம்.

## இருநூத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 205-வது பாட்டு

அப்பனே ஒருவருடம் கஷ்டப்பட்டீர்
　　ஆனதொரு கஷ்டமது துலைந்துதப்பா
ஒப்பவே யேழுதினம் கழிந்துவிட்டால்
　　உலகத்தில் உனக்கிடு யாருமில்லை
செப்பவே நீ யெடுத்தகார்யம் கூடும்
　　ஜெகமதனில் கைத்தொழிலும் கூடிநிற்கும்
இப்பவே நீ முன்செய்த தொழிலைச்செய்வீர்
　　உத்தமனே சகலமது நன்மையாகும்.

வசனம்:—நீர் ஒருவருஷம் கஷ்ட மனுபவித்தீர் அது இன்னம் யேழுநாள் சென்றபிறகுநீரும் உலகத்தில் உனக்குச் சமானம் யாருமில்லை, யெடுத்த காரியம் கூடும் முந்தி செய்துக்கொண்டிருந்த தொழிலைச் செய்யவும் உனக்கு நன்மையாகும் இது உத்தமம்.

## இருநாத்தி ஆறாவது வீட்டின் பலன்

### 206-வது பாட்டு

கைவிட்டு போனதப்பா பொருள்தான் ஒன்று
　கனவருத்தப் படவேண்டாம் இன்னம்கேளு
அவனிதனில் அப்பொருள்தான் பெண்கையில்
　அகப்பட்டு யலையுதடா பயமேயாகி
பவமுடனே ஈரெட்டு நாளிலப்பா
　பண்புடனே பொருள்வந்து சேரும்சேரும்
கூவிநீயும் பேசாமல் இருப்பாயாகில்
　கொப்பனவே வாயல்தன்னில் போட்டுப்போவாள்.

வசனம்:—உன்னுடைய பொருளானது கைவிட்டுப் போச்சுது, அதைப்பற்றி மனக்கவலை யடைகிறீர் துன்பப் படவேண்டாம் அந்தப் பொருள் ஓர் பெண் யெடுத்து பயமடைந்திருக்கிறாள் இன்னும் ஈரெட்டு தினத்தில் உன் வீட்டு வாயிலில் போட்டுவிடுவாள் நீ மவுனமாயிரு இது உத்தமம்.

## இருநாத்தி ஏழாவது வீட்டின் பலன்

### 207-வது பாட்டு

மனக்கவலை தீருமப்பா உந்தனுவிப்போ
　மைந்தனே தனலாபம் கிடைக்கும்பாரும்
கனமுடனே குடும்பவிர்த்தி யதிகமாகும்
　குவலயத்தில் வீட்டின்கார்யம் ஜெயமாகுமே
தினந்தோறும் வியாபார மதிகரிக்கும்
　தேடியதோர் மாதாலே லாபமுண்டு
நினவுடனே ஜென்மத்தில் இராகுதானே
　நினைவுடனே வொழிகின்றான் எட்டுநாளில்.

வசனம்:—உன்னுடைய மனக்கவலை தீரும் தனலாபமதிகரிக்கும் குடும்ப விர்த்தியடைந்து மேன்மைப்படும் வீட்டின்கார்யம் ஜெயமாகும் வியாபாரமதிகரிக்கும் ஓர் மாதாலே லாபமுண்டு ஆனால் உனக்கு ஜென்மத்தில் இராகு யிருக்கின்றான் அவன் எழுதினத்தில் ஒழிந்துபோகின்றான் பிறகு இனி செல்வம் கூடும் உத்தமம்.

## இருநூற்றி எட்டாவது வீட்டின் பலன்

### 208-வது பாட்டு

சித்தமதில் யெண்ணமிட்ட கார்யம்கூடும்
செப்பரிய குடும்பமது விர்த்தியாகும்
புத்திரரை பெற்றுநீயும் வாழ்வீரப்பா
புத்தியிலே வெளியூரின் ஆசைநீக்கு
உத்தமனே வுந்தனுக்கு குருகடாக்ஷம்
உண்மையுடன் நாற்பதுநாள் கழிந்துவிட்டால்
பத்தியுடன் யெக்கார்யம் செய்வீராகில்
பலிக்குமடா இதுவுண்மை நம்புநீதான்.

வசனம்:—உன் சித்தத்தில் எண்ணமிட்ட காரியம் கூடும் குடும்பவிர்த்தியாகும் புத்திரரைப் பெற்று பெரும் பதவியடைவீர் உன்னுடைய சித்தமதில் வெளியூருக்குப் போக எண்ணமிட்டீர் அது வேண்டாம் உனக்கு இன்னும் நாற்பதுநாள் கழிந்தால் குருபலன் வருகிறது அச்சமயத்தில் யெக்காரியமும் முடியும் இது உத்தமம்.

## இருநூற்றி ஒன்பதாவது வீட்டின் பலன்

### 209-வது பாட்டு

மண்டலத்தில் நீநினைத்த கார்யமப்பா
மைந்தனே கைக்கூடி நிற்காதப்பா
கண்டதொரு தொழில்நீதான் செய்தாயாகில்
கவலையது பட்டலைச்சல் படுவாய்நீதான்
விண்டமுடன் சிநேகிதத்தில் விரோதமப்பா
வேகமுடன் வந்தடையும் வுந்தனுக்கு
தண்டருட இம்மாதம் போனபின்பு
திருமப்பா உன்கவலை யெல்லாம் தானே.

வசனம்:—நீ எண்ணமிட்ட கார்யமானது கைக்கூடி நிற்காது யெத்தொழில் செய்ய மனமிட்டாலும் அது முடியாது அதனால் கவலைப்பட்டு யலைவீர் சினேகிதனுக்கும் உனக்கும் விரோதம் வந்தடையும் இதுயெல்லாம் இம்மாதம் கழிந்தபிறகு நன்மையாகும் இது மத்திமம்.

## இருநூற்றி பத்தாவது வீட்டின் பலன்

### 210-வது பாட்டு

கானகமே சென்றிட்ட மாடுதானும்
கனமுடனே வீடுவந்து சேருமப்பா

தானமுடன் பிறர்பொருளும் வந்துசேரும்
தன்மையுடன் மாதாலே லாபமுண்டு
மானமுடன் யெடுத்தவியாஜ்யம் தீருமப்பா
மைந்தனே அடுத்தவீட்டு பகைதான் தீரும்
நாணமுடன் காணாத மனிதர் தானும்
நன்மையாக வந்துமனையில் சேர்வாரப்பா.

வசனம்:—நீர் இப்போ கேட்டது யாதென்றால் கானகம் போன மாடு இன்னும் வரவில்லையேயென்று துயரமடைந்தீர் அது வந்து சேரும் இதரமானபொருள் கிடைக்கும் மாதாலே லாபமுண்டு யெடுத்த வியாஜ்யம் தீரும் அடுத்த வீட்டின் பகை வெல்வீர் யென்றும் பார்க்காதமனிதரைப் பார்ப்பீர் இது உத்தமம்.

## இருநூற்றி பதினோராவது வீட்டின் பலன்

### 211-வது பாட்டு

அப்பனே உந்தனிடப் பொருளை தன்னை
அபகரித்தான் உன்னுடனே நேசமாகி
செப்பரிய மானிரமடைந்தவன் தான்
செய்துவிட்டான் உந்தனையே மோசம்தானே
இப்பவே அப்பொருளும் வந்துசேரும்
இயல்புடனே துக்கமதை விடுவீரப்பா
தப்பாது வுந்தனுக்கு குருபலன்தான்
தணிகைமலை முருகருட கடாக்ஷமுண்டு.

வசனம்:—உந்தனிடத்திலிருந்து ஓர் பொருளை உன்னுடன் நேசமாயிருந்தவன் அவன் மானிரமுடையவன் அப்பாதகன் அபகரித்துக்கொண்டு போனான் நீ துயரப்படவேண்டாம் அந்தபொருள் வந்துசேரும் உனக்கு குருபலன் அதிகரித்திருக்கிறது இதல்லாமல் முருகருடைய கடாக்ஷமும் யிருக்கிறது உத்தமம்.

## இருநூற்றி பனிரெண்டாவது வீட்டின் பலன்

### 212-வது பாட்டு

அந்தமாக நீர்பட்டீர் துன்பமெத்த
அரசனென சனியனுட கோலாலின்று
சொந்தமான மாடுகன்று வீடுபோச்சு
சொகுசான மாதுவும்மை பிரிந்திருந்தாள்

பந்தமுடன் ராகுகேது தொடர்ந்ததாலே
பலபேரு மூணைமக்கண்டால் தூஷித்துநின்றார்
இந்தநல்ல கஷ்டமெல்லாம் உனக்குதானே
ஈரெட்டு மாதமாகும் நிலைவதற்கு.

வசனம்:—நீர் பட்ட துன்பம் சொல்லமுடியாது உனக்கு சொந்தமாக சனி இருந்து மாடு கன்று வீட்டையெல்லாம் தோர்க்கச் செய்தான் மனைவியைப் பிரியச்செய்தான் இத்துடன் இராகு கேது இவர் தொடர்ந்தார் பல பேரும் தூஷிக்கலானார் இந்த கஷ்டமெல்லாம் ஈரெட்டுமாதம் வரைக்கும் அனுபவிக்கவேண்டியது இது மத்திமம்.

## இருநூத்தி பதின்மூன்றாவது வீட்டின் பலன்

### 213-வது பாட்டு

ஆராய்ந்து பார்க்கின்றாய் நீதானப்பா
அய்யனுடைய கருணையது மெத்தவுண்டு
சேராத மனிதரும் வந்தேசேர்வார்
செப்பரிய பொருளுந்தன் மனையில்சேரும்
தீராத பிணியதுமே தீருமப்பா
தெய்வத்தின் சகாயமது மெத்தவுண்டு
நீராக போகுமடா துன்பமெல்லாம்
நீநினைத்த கார்யமது கூடிநிற்கும்.

வசனம்:—நீ துயரமடைந்து யோசனை செய்கின்றீர் படைத்தவனுடைய கருணை மெத்தவுண்டு சேராத மனிதர் வந்து சேர்வார் பொருளுதவியாகும் தீராத பிணியது தீரும் உனது துன்பமெல்லாம் நீராக போகும் நீ யேதுக்கும் துயரப்படவேண்டாம் இது உத்தமம்.

## இருநூத்தி பதினான்காவது வீட்டின் பலன்

### 214-வது பாட்டு

ஏரிகட்ட மனதுட்கொண்டாய் இப்போநீதான்
இயல்புடனே நல்லபலன் உனக்கேயாகும்
கோரியதோர் பொருளுனக்கு கைக்கூடுமே
கூட்டுதொழில் வேண்டாமப்பா யெப்போதுமே
நாரியாலே லாபமது வந்தேசேரும்
நாடிவுந்தன் தேவதைக்கு பூஜைப்போடும்

பாரிலுனக் கிடில்லை யெவர் தானப்பா
பண்புடனே யெடுத்தகார்யம் கூடிவாழ்வீர்.

வசனம்:—நீர் இப்போது நூதனமாய் யேரி கட்டமனமிட்டீர் அதைக் கட்டினால் உனக்கு வேளாண்மை யதிகரிக்கும் பொருள் சேரும் மாதாலே லாபம் கிடைக்கும் யெடுத்த கார்ய முடியும் உனக்கு ஈடு யெவரையும் சொல்லமுடியாது ஆனால் நீர் உன்னுடைய தேவதைக்கு பூஜைப்போடுவீர் இது உத்தமம்.

## இருநூத்தி பதினைந்தாவது வீட்டின் பலன்

### 215-வது பாட்டு

சாம்பல்வர்ன மாட்டையொன்று பிடித்தீரப்பா
சார்புடனே கைப்பொருளும் நஷ்டமாகும்
தாமதமில்லாமல் வீட்டில் கஷ்டம்நேரும்
தயவுடனே மனையாட்டி மறுதேசம்போவாள்
ஆமப்பா உன்தொழில்தன்னில் ஆனியாகும்
அடுத்ததோர் பகையாளி யெதிர்த்துநிற்பான்
காமப்பா இந்தவீடு ஆகாதப்பா
கண்மணியே நினைக்காதே கைக்கூடாது.

வசனம்:—நீர் இப்போது சாம்பல் வர்னம் பூண்ட மாடு ஒன்றை வாங்கினீர் அதனால்கைப்பொருள் நஷ்டமாகும் வீட்டில் கஷ்ட மடைவீர் உன்னுடைய மனையாட்டி பரதேசம் போவாள் நீ செய்யும் தொழில் தன்னில் கெடுதி சம்பவிக்கும் உன் பகையாளி யெதிர்த்து நிற்பார் இந்த வீடு பொல்லாது இதுவுமன்றி அம்மாட்டால் கெடுதி சம்பவிக்கும் இது மத்திபம்.

## இருநூத்தி பதினாறுவது வீட்டின் பலன்

### 216-வது பாட்டு

கலியாணம் செய்துக்கொள்ள மனமேயிட்டீர்
கன்னியவள் கூடுமாவென யெண்ணம்கொண்டீர்
சலியாமல் யப்பெண்ணுதான் கூடுமப்பா
சச்சரவு யதிகமாகி முடிந்துவாழ்வீர்
நலியாமல் பொருள்வந்து சேருமப்பா
நாடிநீதான் போகும்கார்யம் ஜெயமாகுமே
அலியாமல் பிணிகளது தீருமிப்போ
அய்யருட கருணையாலே முடியுமப்பா.

வசனம்:—கலியாணஞ் செய்துக்கொள்ள மனமிட்டீர் நீர் நினைத்த மாது கூடி கலியாணம் முடியும் ஆனல் சச்சரவுகள் அதிகரிக்கும் இது யெல்லாந் தீர்ந்து பொருள்வந்து சேரும் போகும் கார்யம் ஜெயமாகும் திரேகத்தில் பிணிநீரும் ஆனல் குருகடாக்ஷ மிருக்கிறது நீ பயப்பட வேண்டாம் இது உத்தமம்.

## இருநூத்தி பதினேழாவது வீட்டின் பலன்

### 217-வது பாட்டு

தங்கநகை ஒன்றைநீ கொண்டாயப்பா
தயவுடனே அதனாலே லாபமுண்டு
பொங்கமுடன் குருசேவை யடைவீரப்பா
பொல்லாத காலமெல்லாம் போச்சுதின்று
மங்களமாய் மாதொருத்தி வந்தேவாழ்வாள்
மைந்தனே புத்திரபாக்கியம் பெறுவீரப்பா
சங்கரனார்புதல்வனான கணேசருன்னை
சதாகாலம் கார்த்திடுவார் உண்மைதானே.

வசனம்:—நீர் இப்போது புதிதாக தங்க நகை யொன்றை வாங்கி வந்தீர் அதனாலே லாபமுண்டு குருசேவையடைவீர் நல்லதிசைவந்தடைந்து மாதொருத்தி வாழ்வாள் புத்திரபாக்கியம் பெறுவீர் கணேசர் சதாஉன்னை கார்த்தளிப்பார் இது உத்தமம்.

## இருநூத்தி பதினெட்டாவது வீட்டின் பலன்

### 218-வது பாட்டு

எட்டுதனில் குருவுனக் கிருப்பதாலே
யெடுத்ததோர் கார்யமது கூடாதப்பா
சட்டமுடன் வியாஜ்யமது தீராதப்பா
சனிவுனக்கு பொல்லாதவன் இன்னம்கேளும்
திட்டமுடன் மாதாலே கலகம்சேரும்
தீராதபிணியதுதான் வந்தே சூழும்
பட்டமுடன் மக்களுன்னை பிரிவாரப்பா
பண்புடனே யெக்கார்யம் செய்யாதேநீ.

வசனம்—:உனக்கு எட்டாம் வீட்டில் குரு யிருப்பதால் யெடுத்தகார் யம் கூடாது வியாஜ்யம் தீராது சனி பொல்லாதவன் மாதாலேகலகமுண்டு தீராத பிணியொன்று வந்து கூடும் மக்கள் பிரிந்து நிற்பார் நீ யெந்த கார்யமும் செய்யாதே மத்திமம்.

## இருநூத்தி பத்தொன்பதாவது வீட்டின் பலன்

### 219-வது பாட்டு

யெடுத்ததோர் கார்யமது கூடுமப்பா
யெண்ணமதுக் கொள்ளாதே இப்போநீதான்
அடுத்ததோர் வீட்டின்பொருள் வந்தேசேரும்
ஆனதோர் மனைவிமக்கள் வந்துவாழ்வார்
கடுமனம்கொள்ளாதே யெவர்கள்மீது
காசியெங்கும் வுறவாகி நிற்பாய்நீதான்
திடுக்கிட்டு துன்பமெல்லாம் தீருமப்பா
தேவனருள் உந்தனுக்கு மெத்தவுண்டு.

வசனம்:—நீ இப்போது யெடுத்த கார்யம் பலிக்கும் அடுத்த வீட்டின் பொருள் வந்துசேரும் மனைவி மக்கள் வந்து சுகமடைவீர் யெவர்கள்மீதும் கமெனம் கொள்ளாதே உன்னை மேன்மையாக யெண்ணுவார் உனக்கு குரு கடாக்ஷம் அதிகரிக்கிறது இது உத்தமம்.

## இருநூத்தி இருபதாவது வீட்டின் பலன்

### 220-வது பாட்டு

கானகமே போனதொரு மாடுதானும்
கனமுடனே வரவில்லை யென்றுநீதான்
போனமுடன் மனமிட்டு தொட்டீரப்பா
போனமாடு இரண்டுநாளில் வந்துசேரும்
மானமுடன் மாதாலே லாபமுண்டு
மைந்தனே துயரமது கொள்ளாதப்பா
தீனமுடன் வுந்தனுக்கு குருபலன்தான்
தேடியே மெத்தவுண்டு துயரம்போமே.

வசனம்:—நீர் கானகம் போன மாடு இதுவரைக்கும் வரவில்லை யென்று மனக்கவலை யடைந்தீர் அந்தமாடு இன்னும் இரண்டுதினத்தில் வந்துசேரும் மாதாலே லாபமுண்டு குருகடாக்ஷ மெத்தவுண்டு நீதுயரப்பட வேண்டாம் உத்தமம்.

## இருநூத்தி இருபத்தி ஓராவது வீட்டின் பலன்

### 221-வது பாட்டு

கைவிட்டுப் போனபொருள் வாராதப்பா
கடுகவே பொல்லாங்கு வந்தேசேரும்

புவிதனிலே யெடுத்தகார்யம் முடியாதப்பா
போனமனிதர் வீடுவந்து சேராரப்பா
தவியுடனே மாதன்னைப் பிரிவாளின்று
தனிமையுடன் குருகடாக்ஷ மில்லை இல்லை
அபியுடனே சனியுனக்கு ஏழில் நின்றன்
அப்பனே பலியாது எந்தகார்யம்.

வசனம்:—கைவிட்டுப் போன பொருள் வராது பொல்லாங்கு வந்து சேரும் யெடுத்த கார்யமுடியாது போன மனிதர் வரமாட்டார் மனைவி யிரிந்திருப்பாள் குருகடாக்ஷம் கிடையாது மத்திபம்.

## இருநூத்தி இருபத்திரண்டாவது வீட்டின் பலன்

### 222-வது பாட்டு

அப்பனே மனையொன்று வாங்கநீதான்
ஆசையது பட்டாயடா வுனக்குஇன்று
செப்பரிய அதனாலே லாபமுண்டு
செல்வனே பொருளுனக்கு வந்துசேரும்
ஒப்பரிய காணாதமனிதர் வருவார்
உத்தமனே வேளாண்மை அதிகரிக்கும்
தப்பிதங்கள் வொன்றுமில்லை இந்தவீட்டால்
தயவுடனே யெடுத்தகார்யம் கூடுமப்பா.

வசனம்:—நீர் மனையொன்று வாங்க மனமிட்டீர் அதனால் லாப முண்டு பொருளும் சேரும் பார்க்காத மனிதரை பார்ப்பீர் வேளாண்மை அதிகரிக்கும் இது உத்தமம்.

## இருநூத்தி இருபத்தி மூன்றாவது வீட்டின் பலன்

### 223-வது பாட்டு

பகையாளி வொருவனுன்மேல் போருசெய்து
பக்ஷமுடன் குடிகெடுக்க யெண்ணமிட்டான்
அகமுடனே யப்பாவி கெட்டேபோவான்
அப்பனே உனதுகஷ்டம் தலைக்துபோச்சு
சுகமுடனே யெடுத்தகார்யம் கூடுமப்பா
சோரதபொருளுனக்கு வந்தேசேரும்
தகமையுடன் மக்கள்பாக்கியம் பெருவீரப்பா
தாரணியில் பாக்கியமது மெத்தவுண்டு.

வசனம்:—உன் குடிகெடுக்க ஒருவன் எண்ணமிட்டு இருக்கின்றான் அப்பாதகன் கெட்டுப் போவான் உன் கஷ்டம் தொலைந்தது யெடுத்த கார்யம் கூடும் பொருள்சேரும் மக்கள் பாக்கியம் பெருவீர் இது உத்தமம்.

## இருநூத்தி இருபத்தி நான்காவது வீட்டின் பலன்

### 224-வது பாட்டு

அப்பனே மாதொருத்தி வீட்டைவிட்டு
அன்புடனே வெளிசென்று ஈரெட்டாச்சு
தப்பாமல் தனிபுருடனோடு இன்று
தங்கிமறு தேசஞ்சென்று வாழ்கின்றாளே
இப்பவே யம்மாது வரவேமாட்டாள்
எடுத்த வியாஜ்யம் வுந்தனுக்கு பலியாதப்பா
செப்பரிய பொருளுனக்கு நஷ்டமாகும்
செய்தொழிலும் கைவிட்டுப் போகுமின்று.

வசனம்:—உன்னுடைய வீட்டி லிருக்கப்பட்ட மாது ஒருபுருடனுடன் தொடர்ந்து மறுதேசம் சென்றாள் அம்மாது இனிவரமாட்டாள் நீயம்மாது மேல் வியாஜ்யம் யெடுத்தீர் அது தீராது பொருளும் நஷ்டமாகும் கைத் தொழிலும் கிட்டாது இது மத்திபம்.

## இருநூத்தி இருபத்தி ஐந்தாவது வீட்டின் பலன்

### 225-வது பாட்டு

அஷ்டலக்ஷ்மி உன்மனையில் வந்தேவாழ்வாள்
அப்பனே துயரமெல்லாம் தீருமின்று
கஷ்டமொன்று முமக்கில்லை யினிமேலப்பா
கர்த்தனுட அருளுனக்கு மெத்தவுண்டு
நஷ்டமான பொருளுனக்கு வந்தேசேரும்
நாட்டிலெங்கும் கியாதியது மெத்தவுண்டு
இஷ்டமுடன் மனைவிமக்கள் சுகமாய்வாழ்வார்
ஈசரான கணேசருட கடாக்ஷத்தாலே.

வசனம்:—உனக்கு லக்ஷ்மிகடாக்ஷம் அதிகரிக்கும் துயரமெல்லாம் தீரும் கஷ்டம் தொலையும் நஷ்டப்பட்ட பொருள் வந்துசேரும் புவியில் கியாதி யதிகரிக்கும் மனைவிமக்களுடன் சுகமாய் வாழ்வீர் கணேசர் அருள் மெத்தவுண்டு, இது உத்தமம்.

## வாழ்த்து - விருத்தம்

சீர்வாழ்க சிறப்புள்ள பெரியோர் வாழ்க
செம்மையுடன் சித்தாதி முனிவர் வாழ்க
பேர்வாழ்க பெருமையுட கவிஞர் வாழ்க
பேசிட்ட கணேசரா ரூடம் வாழ்க
நீர்வாழ்க நிதமுமிதை படித்தோர் வாழ்க
நீணிலத்தி லிச்சாஸ்திரம் பார்த்தோர் வாழ்க
கார்வாழ்க கருணையுடன் குருபாதம் வாழ்க
கனம்பெற்ற ரோமநாதர் சதா வாழ்க.

## ஸ்ரீ கணேச ஆரூட தீபிகை

முற்றுப்பெற்றது.

சுபம். சுபம்.



திருமகள் விலாச அச்சு நிலயம் சென்னை, 1951.

**சிகிச்சாரத்ந தீபம்** விலை ரூ. 5-0-0

[வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப்பிள்ளை அவர்கள் இயற்றியது. வாலையந்திரப் படங்களுடன்]

இந் நூலாசிரியரான C. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் தென்னாடு முதல் வடநாடு வரையிலும் அனுசரித்து வரும் அரிய பெரிய பாகங்களையும், யூனானி வைத்திய முறைகளையும், பெரும் பொருள் செலவிட்டு முடித்துப் பயன் பெற்றவைகளாயுள்ள பாகங்களை யெல்லாம் ஒருங்கு தொகுத்து ஒவ்வொருவரும் எளிதில் உணரும் வண்ணம், தேக பஞ்ச பூதம், நாடி, ரோக நிதானம், செய்பாக விளக்கம், கியாழம், சூரணம், மாத்திரை, மெழுகு, லேகியம், கிருதம், செந்தூரம், பற்பம், தீநீர், திராவகம், ஆசவம், அரிஷ்டம், பத்தியம் இன்னும் பல பாகங்களையும் இலம்பகங்களாக வரைந்துள்ளார் இந் நூல் வைத்தியத்தொழிலைக் கற்க விரும்பும் மாணவர்களுக்கும் வைத்தியர்களுக்கும் மற்ற ஏனையோருக்கும் பெரும் நன்மையைத் தரத்தக்க தென்பது எவருமறிந்த உண்மை.

சிகிச்சாரத்ந தீபம் இரண்டாம் பாகமாகிய

**வைத்திய சிந்தாமணி** விலை ரூ. 4-0-0

[வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் இயற்றியது]

இந்த "வைத்திய சிந்தாமணி" என்னும் நூலானது பூர்வாசிரியர்களில் ஒருவராகிய யூகிமாமுனி என்பவரால் கூறப்பட்டது. இதனில் ரோக நிதானங்களை ஏறக்குறைய கூறியிருப்பதினால் இதனை ஆதரவாகக் கொண்டு வசன காவியமாக எழுதினது மல்லாமல், சில இடங்களில் சமயத்திற் கேற்றவாறு மற்றும் சிலகிரந்தங்களினின்று சிலது சேர்க்கப்பட்டும் ஒவ்வொரு ரோகங்களின் இறுதியில் ஆங்கிலேய மருத்துவத்தில் கூறப்பட்டுள்ள ரோக நிதான விஷயங்களை ஸாரதரமாகவும், அமைத்துக் காலதேச வர்த்தமானங்களுக்குத் தக்கவாறு சிகிச்சைகளும் சேர்த்து அநேக அருமை வாய்ந்த முறைகளுடன் எழுதப்பெற்றிருக்கின்றது.

**இங்கிலீஷ் தமிழ்**
**வைத்திய சிகாமணி** விலை ரூ. 3-8-0

இப்புத்தகம் இங்கிலீஷ் படித்தவர்களுக்கும், தமிழ் மாத்திரம் வாசித்தவர்களுக்கும் ஆக இரு வகுப்பாருக்கும் உபயோகப்பட வேண்டுமென்று ஒவ்வொரு முறையும் இங்கிலீஷில் ஒருபக்கத்திலும், அதற்கு நேர் பக்கத்தில தமிழிலுமாக கைமுறைகள் ஒவ்வொன்றையும் எந்த வைத்தியர்கள் கையாண்டிருந்து உண்மையானதென்று வெளியிட்டிருந்தனரோ அவரவர்கள் பெயரை அந்தந்த முறைகளின் கீழேயே சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்நூல் ஆங்கில வைத்தியத்தொழில் கற்றுக்கொள்ள விரும்பும் மாணவர்களுக்கும், கம்பவுண்டர்களுக்கும் மிகவும் அவசியமானது.